# கல்கி

KALKI
4.11.2007
ரூ.8.00
80 பக்கங்கள்

குடும்பத்துடன் படிக்க...



வெல்கம் தீபாவளி!

# கிரிக்கெட் மீது வெறுப்பா?




# Team Health Shoppe
## For Wellness

# அரிது, அரிது ஆலோவேரா அரிது !

## இயற்கை முறையினாலான ஆலோவேரா பொருட்கள்




**இப்பொழுது**
**தி.நகரில்**










## TEAM EUBIO CARE

**வண்டலூர்:** டீம் ஹவுஸ், (Opp. to Vandalur Zoo) ஜி.எஸ்.டி. ரோடு, போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) 4269 3332

**புரசைவாக்கம்:** எண்.23B, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ் (அபிராமி மெகாமால் எதிரில்) புரசைவாக்கம் ஹை ரோடு, 4542 8898

**இந்திரா நகர்:** 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், 4269 5115

**தி.நகர் :** பு.எண். 2, ப.எண். 60, லலிதா கிருஷ்ணா அபார்ட்மெண்ட், (Near Bharathiraja Hospital, Off. G.N. Chetty Road) கிரி ரோடு, 4269 4849

For bulk requirements,Please Contact : Team House - GST Road, Vandalur, Ch - 48
Fax : 22750860 (or) E-mail: teamhealthshoppe@drraoholdings.com

www.teamhealthshoppe.com | OPEN ON ALL DAYS



மங்கையர் மனம் கவரும்
மங்கள மண நகைகள்
கலைநயத்தின் எல்லைகளாக காண்போரின் மனங்களை கொள்ளை கொள்கின்ற பாரம்பரியம். புராதான மற்றும் நவநாகரீக நகைகள், சில்க்ஸ் மற்றும் ரெடிமேட் ஆடைகளின் அணிவகுப்பு. அத்தனையும் உள்ளத்தை குளிரவைக்கும் கனிவான சேவைகளுடன். எங்களின் 50 வருட பாரம்பரியத்தின் மகத்துவத்தை இப்போது விவாஹா மற்றும் ஸ்ரீ குமரன் தங்கமாளிகை ஆடை ஆபரணங்களுடன் கொண்டாடுங்கள்.



விவாஹா
ஆடைகளில் அனைத்தும்... அற்புதமாய்
50 வருட பாரம்பரியத்தின் அடையாளம்



ஸ்ரீ குமரன் தங்கமாளிகை
ஆபரணங்களில் எல்லாம் அழகழகாய்...
× கடையின் கீழ்தளத்தில் பிரம்மாண்டமான கார்பார்க்கிங் வசதி
× ஞாயிறு கடை உண்டு
Shop online at www.ktmjewellery.com
634-642 ஒப்பணகார வீதி. கோவை. போன் : 2301555

# கே.கே.எஸ்.எஸ்.ஆரை பந்தாடிய அழகிரி?



மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சராக இருந்த கே.கே.எஸ்.எஸ்.ஆர். ராமச்சந்திரனின் இலாகா பறிப்பு, கருணாநிதி குடும்பத்திலுள்ள அதிகார மையங்களிடையே நடக்கும் உரசலின் வெளிப்பாட்டை மீண்டும் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்துள்ளது. தென் மாவட்டங்களைப் பொறுத்தமட்டில், ஆட்சி மட்டத்திலும் கட்சி மட்டத்திலும் அழகிரியின் சொல்லே இறுதியானது. மாறன் சகோதரர்களுடன் நடந்த மோதலில் தான் நினைத்ததை நடத்திக் காட்டிய அழகிரி, கே.கே.எஸ்.எஸ்.ஆரின் இலாகாவைப் பறித்ததன் மூலம் ஸ்டாலினுடன் மீண்டும் உரசத் துவங்கிவிட்டார் என்கிறார்கள்.

தென் மாவட்டங்களில் ஸ்டாலினின் உறுதியான ஆதரவாளர்களில் ஒருவராக இருப்பவர் கே.கே.எஸ்.எஸ்.ஆர். அவருக்கும் அழகிரிக்கும் ஆரம்பம் முதலே சுமுக உறவு இல்லை என்று சொல்லப்படுகிறது. விருதுநகர் மாவட்டச் செயலாளராக கே.கே.எஸ்.எஸ்.ஆர். வருவதில் அழகிரிக்குச் சற்றும் உடன்பாடில்லையாம். ''அழகிரி அண்ணன் அவரை ஒரு முன்னாள் அ.தி.மு.க.காரராகவே பார்த்தார்'' என்கிறார்கள். தம்முடைய சிஷ்யர் தங்கம் தென்னரசுக்குச் செயலாளர் பொறுப்பை வாங்கித் தந்துவிட வேண்டும் என்று தீவிரமாக முயன்று பார்த்தாராம் அழகிரி. ஆனால், தென் மாவட்டங்களில் தமக்கு நம்பிக்கையான ஆட்கள் தேவை என்ற அடிப்படையில், கே.கே.எஸ்.எஸ்.ஆர், கருப்பசாமி பாண்டியன், (மறைந்த) தா.கிருஷ்ணன் போன்றவர்களுக்குத் தமது ஆதரவைக் கொடுத்து ஊக்குவித்தாராம் ஸ்டாலின். அந்த வகையில் மாவட்டச் செயலாளரானவர்தான் கே.கே.எஸ்.எஸ்.ஆர்.



படம் : ஸ்ரீஹரி

இந்நிலையில் 2006ல் கலைஞர் மீண்டும் ஆட்சிக்கு வந்தவுடன் கே.கே.எஸ்.எஸ்.ஆர். ஸ்டாலின் ஆசீர்வாதத்துடன் அமைச்சராகிவிட்டார். ஆனால், செல்வாக்கு மிக்க மக்கள் நல்வாழ்வுத் துறை அவருக்குக் கொடுக்கப்பட்டதை கடுமையாக எதிர்த்தாராம் அழகிரி. என்றாலும், ஸ்டாலின் பக்கபலமாக இருந்ததால்

## -அப்செட் ஸ்டாலின்

எதுவும் செய்ய முடியவில்லை என்கிறார்கள்.

அமைச்சர் கே.கே.எஸ்.எஸ்.ஆர். மிகச் சுறு சுறுப்பாகவே செயல்பட்டார் என்பது கோட்டை அதிகாரிகளின் கமெண்ட். "அவர் ரொம்ப பிராக் டிக்கலானவர், கலந்தாலோசித்தே முடிவுகளை எடுப்பார்" என்கிறார்கள். இருந்தும் சென்னையை ஒட்டியுள்ள ஒரு சிறுபான்மை கல்வி நிறுவனம், மருத்துவக் கல்லூரி துவங்கும் விவகாரத்தில் அவர் சர்ச்சையில் சிக்கிவிட்டார் என்ற பேச்சும் இருக் கிறது. இதுதவிர, சமீபத்தில் கிட்னி மோசடி விவ காரத்தில் இரண்டு மருத்துவமனைகளின் அங்கீ காரம் ரத்து தொடர்பான பிரச்னை எழுந்தது. இதில் ஒரு மருத்துவமனை முக்கிய தி.மு.க. பிரமுகரின் நெருங்கிய உறவினர் நடத்துவது. இதுவும் அமைச்சர் பதவி பிடுங்கப்பட காரணம் என்கிறார்கள். விருதுநகர் மாவட்டத்தின் ஒரு பேரூராட்சியில் அ.தி.மு.க. வெல்வதற்கு மறை முகமாக உதவியதால்தான் அழகிரி சரியான சமயமாகப் பார்த்து வேட்டு வைத்துவிட்டார் என்று சொல்வோரும் உண்டு.

ஸ்டாலினால் இந்த முறை கே.கே.எஸ்.எஸ். ஆரைக் காப்பாற்ற முடியவில்லை. அவரைச் சுத்த மாக அமைச்சர் பதவியிலிருந்தே நீக்க வேண்டும் என்பதுதான் மதுரையிலிருந்து வந்த விருப்பமாம். ஆனால், ஜெயலலிதா போல் இல்லாமல் கலை ஞர் தமது அமைச்சர்களைக் கழற்றிவிட விரும்பாத வர். எனவேதான் பிற்பட்டோர் நலத்துறைக்கு அவரை மாற்றிவிட்டாராம். இருந்தும் அழகிரியின் கோபம் தணியாததால் அவரைச் சில அமைச்சர்கள் சமாதானம் செய்தார்களாம். மக்கள் நல்வாழ்வுத் துறை இப்போது ஸ்டாலினின் மற்றோர் ஆதர வாளரும் வட மாவட்டத்தைச் சேர்ந்தவருமான எம்.ஆர்.கே.பன்னீர்செல்வத்திடம் கொடுக்கப் பட்டுள்ளது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி கருப்பசாமி பாண்டியனை அமைச்சராக்க ஸ்டாலின் செய்த முயற்சியும் எடுபடவில்லை என்கிறார்கள். நெல்லையில் இளைஞர் அணி மாநாடு நடைபெறப்போகும் நிலையில், ஒரு நல்ல அமைப்பாளர் உற்சாகம் இழக்கும் நிலை ஏற் பட்டுவிட்டதே என்று அப் செட்டில் இருக்கிறாராம் ஸ்டாலின்.

– ப்ரியன்

* கே.கே.எஸ்.எஸ்.ஆர்.







# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

தீபாவளி வந்தாலே எல்லோருடைய மனசுக்குள்ளும் சந்தோஷம் மத்தாப்பூ கட்டி ஆட்டம்போட ஆரம்பித்துவிடும். இல்லங்களைப் புத்தொளியால் நிறைக்கும் இந்தத் தீபாவளி, உள்ளங்களை அற்புத அனுபவங்களால் மலர்த்திவிட்டுப் போகவும் மறப்பதில்லை. ஏழை - பணக்காரன் என்ற எந்தவித பேதமுமின்றி அனைவரையும் ஆட்கொண்டு ஆசீர்வதிக்கும் தீபத் திருநாளை வரவேற்க, எப்படியெல்லாம் காத்திருக்கிறார்கள் மக்கள்? அறிந்துகொள்ளக் களமிறங்கினோம்...



* சுவாமி பத்மானந்தா

# வெல்கம்

**சுவாமி பத்மானந்தா (செயலாளர், ஸ்ரீராமகிருஷ்ண மடம்):**

ஒவ்வொரு மனுஷனோட ஆழ் மனசுலயும் நெருப்பு கனன்றுக்கிட்டே இருக்கு. நன்மைகள் செய்யும்போது அந்த நெருப்பு தீபமா உருமாறி மனசுக்குப் பிரகாசத்தைக் கொடுக்குது. தீமைகள் செய்யும் போது அதே நெருப்புதான் தீயா மாறி மனசாட்சியைச் சுடுது. தீபாவளிங்கறது இதை ஞாபகப்படுத்துறதா நினைக்கிறேன். தீபவாளி இரவு ஆசிரமத்துல காளி பூஜை செய்வோம். இந்த வருஷம் மைலாப்பூர்ல இருக்கிற எங்க தலைமை மடத்துல எல்லா குருமார்களும் சேர்ந்து இந்தத் தீபாவளியைக் கொண்டாடலாம்னு முடிவு பண்ணியிருக்கோம்.

**ஏழுமலை (ஆட்டோ டிரைவர்):**

நாளும் கிழமையும் நலிந்தோர்க்கு இல்லை; ஞாயிற்றுக்கிழமையும் ஆட்டோ டிரைவர்க்கு இல்லைன்னுதான் சொல்லணும். இப்ப பண்டிகை, கொண்டாட்டம் எல்லாமே பணக்காரங்களுக்குத்தான்னு ஆகிப்போச்சு. அவங்களைப் பார்த்து ஏழைங்க ஏங்க வேண்டியதுதான். தீபாவளின்னு சந்தோஷமா இருந்ததெல்லாம் முன்னாடிதான். இப்ப தீபாவளின்னா கடன் தான் ஞாபகத்துக்கு வருது. நான் தீபாவளியக் கொண்டாடுறதை விட்டே நாலு வருஷமாச்சு. நாம பெரியவங்க இருந்துடலாம். சின்னஞ்சிறுசுங்க அப்படி இருக்க முடியுமா? அதனாலதான் அவங்களுக்கு டிரஸ் எடுத்தாச்சு. ஸ்வீட் ஆர்டர் பண்ணியாச்சு. நாளு பூரா ரோடுரோடா சுத்துறோம்... தீபாவளியை சாக்கா வெச்சாவாவது ஒரு நாளு வீட்டுல இருப்பேன்.



* ஜெ.கருணாநிதி

என்னைக்கு ஏழை-பணக்காரன் ஏற்றத் தாழ்வு போகுதோ, அதுதான் கொண்டாட வேண்டிய தீபாவளி.

**வெ.சுகுமார் (காவல் துறை அதிகாரி):**

தீபாவளியோட மெயின் கான் செப்ட்டே அதர்மம் அழிஞ்சு தர்மம்

# தீபாவளி!



* மஞ்சுப்ரியா

தலைதூக்கறதுதான். அதே மாதிரி நாட்டுல என்னைக்குக் குற்றமெல்லாம் குறைஞ்சு மக்கள் நிம்மதியா இருக்காங்களோ அது தான் உண்மையான தீபாவளி. அது வரைக்கும் அந்தத் தீபாவளிக்காக ஏங்கிக் கிட்டே ஒவ்வொரு தீபாவளியையும் கொண்டாட வேண்டியதுதான். தீபாவளி சமயத்துலயும் எங்களுக்கு டியூட்டிதான். அதனால இதுவரைக்கும் தீபாவளி சம் பந்தமா எந்த ப்ளானும் பண்ணல. அப் படியே ப்ளான் பண்ணி வெச்சுருந்தாலும் கடைசி நேரத்துல அதை கேன்சல் பண்ண வேண்டிய கட்டாயம் வந்துடும். ஆனா, இதுமாதிரி பண்டிகைகள் மக்களுக்கு அவசியம் தேவை. ஒவ்வொரு மனுஷனும் மனசளவுலயும், உடலளவுலயும் இறுகிப் போய் கிடக்கிறான். அவன் தன்னைத் தானே புதுப்பிச்சுக்கவும், வாழ்த்துகளைப் பரிமாறிக்கறது மூலமா உறவுகளைப் புதுப் பிச்சுக்கவும் இது ஒரு வாய்ப்பா அமையுது.



* லட்சுமி

**லட்சுமி (இல்லத்தரசி):**

தீபாவளின்னாலே என்னை மாதிரி குடும்பத் தலைவிக்கெல்லாம் சந்தோஷம் தான். அன்னைக்கு விதவித மான பலகாரங்கள் செய் யறது மூலம் வீட்டுல உள்ள அத்தனை பேரையும் எங்க கைப்பக்கு வத்தால கட்டிப் போட்டுடுவோம். கணவ ரோட சந்தோஷம், குழந்தைகளோட சந் தோஷம் ரெண்டையும் பார்க்கும்போது மனசு நிறைஞ்சு போய்டும். போன தீபாவளிக்கு எங்க உறவினர், நண்பர்களை இன்வைட் பண்ணி இருந்தோம். இந்தத் தீபாவளிக்கு என்னோட நாத்தனார் வீட்டுக் குப் போறதா இருக்கோம். இதுநாள் வரைக் கும் அவங்ககிட்ட இதைத் தெரியப் படுத்தல. சர்ப்ரைஸா விசிட் பண்ணி அவங்களுக்கு ஷாக் கொடுக்கணும்னு முடிவு பண்ணிட்டோம். பக்கத்து வீட்டுக் குப் பலகாரம் கொடுத்து எங்க அன்பைப் பரிமாறிக்கப் போறோம். அதுதாங்க எங் களுக்குத் தீபாவளி.

**ஜெ.கருணாநிதி**

**(சென்னை மாமன்ற உறுப்பினர்):**

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரைக் கும் உள்ள அத்தனை பேரும் சாதி மத பேதமில்லாம கொண்டாடக்கூடிய திருவிழான்னா அது தீபாவளிதான். கட்சிப் பணி, களப்பணி, அரசியல் பணின்னு சூறாவளியா சுழன்றுக்கிட்டு இருக்கிற எங்க அரசியல் வாழ்க்கையில குடும்பத் துக்குன்னு நான் ஒதுக்கறதே ரொம்பக்

கம்மி. சமயத்துல அதுவும் முடியாமப் போய்டும். அதனால குடும்பத்தோட இந்தத் தீபாவளியைக் கொண்டாடணும்னு முடிவு பண்ணியிருக்கேன். என்கிட்ட வேலை பார்க்கற டிரைவர், வீட்டு வேலை செய்றவங்க அத்தனை பேருக்கும் டிரஸ் எடுத்துத் தரலாம்னு முடிவு பண்ணியிருக்கேன். அதெல்லாத்தையும்விட, நம்ம உதவியால ஒருத்தருக்கு நல்ல காரியம் நடந்து, அவரு நன்றின்னு கைகூப்பி நிப்பாரு பாருங்க... அப்ப மனசுக்குள்ள ஒரு மென்மையான சந்தோஷம் ரீங்கார மிட்டுக்கிட்டே இருக்கும். ஆயிரம் தீபாவளி வந்தாலும் அந்த சந்தோஷத்துக்கு ஈடாகாது.



* வெ.சுகுமார்



* ஏழுமலை

**மஞ்சுப்ரியா (கல்லூரி மாணவி):** நான் ஸ்கூல் படிக்கிற வரைக்கும் பண்டிகைகள பத்தி கேர் பண்ணின தில்லை. ஆனா, காலேஜ் சேர்ந்த பிறகு ஃப்ரெண்ட் சர்க்கிள் அதிகமாயிடுச்சு. அதுவும் நான் படிக்கறது முஸ்லிம் காலேஜுங்கறதுனால எனக்கு முஸ்லிம் ஃப்ரெண்ட்ஸ்தான் அதிகம். அவங்களையெல்லாம் தீபாவளிக்கு வீட்டுக்கு இன்வைட் பண்ணலாம்னு இருக்கேன். தீபாவளியை இப்படித்தான் கொண்டாடு வாங்கன்னு அவங்களும் தெரிஞ்சுக்கு வாங்க, எனக்கும் ஃப்ரெண்ட்ஸை இன்வைட் பண்ணின மாதிரி ஆச்சு. ஒரே கல்லுல ரெண்டு மாங்காய்!



* ஸ்ரீனிவாசன் - ஜமுனாராணி

**ஸ்ரீனிவாசன், ஜமுனாராணி (தலை தீபாவளித் தம்பதி) :** எங்களுக்குக் கல்யாணம் ஆகி பத்து நாளுதான் ஆகுது. கல்யாணம் ஆன கொஞ்ச நாள்லயே தலை தீபாவளியைக் கொண்டாடுவோம்னு நினைச்சுக்கூட பார்க்கல. கல்யாணத்துக்கு பர்சேஸ் பண்ணினதே சேலை, நகைன்னு நிறைய சேர்ந்திருச்சு. தீபாவளிக்குன்னு இன்னும் பர்சேஸ் பண்ணல. தலை தீபாவளிக்கு பரஸ்பரம் ஆளுக்கொரு பரிசு வாங்கித் தர்றதுன்னு முடிவு பண்ணியிருக்கோம். என்ன பரிசுங்கறதை ரெண்டு பேரும் சர்ப்ரைஸாவே வெச்சிருக்கோம். ரெண்டு பேருக்கும் என்ன பெறப்போறோம்னு ஏக டென்ஷன். எப்படா தீபவாளி வரும்னு செம எதிர்பார்ப்புல இருக்கோம்.

**- கமலி**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

செஸ் ஆட்டத்தில் பெற்ற உலக சாம்பியன் பட்டம், ஆனந்தை உற்சாகத்தில் துள்ள வைத்திருக்கிறது. ராஜா அண்ணா மலைபுரத்தில் வாங்கியுள்ள புது வீடு, ரசிகர்களின் உற்சாக வரவேற்பு எல்லாம் தந்த மகிழ்ச்சியோடு நம் கேள்விகளை எதிர் கொண்டார்...

# கிரிக்கெட் மீது வெறுப்பா?

**முந்தைய சாம்பியன்ஷிப் வெற்றிக்கும் இப்போதைய வெற்றிக்கும் என்ன வித்தி யாசத்தை உணர்கிறீர்கள்?**

''இரண்டுக்கும் பெரிய வித்தியாச மில்லை. ஆனால், முன்னது எலிமி னேஷன் முறையில் ஆடிய போட்டி. எனவே ஒவ்வொரு இரண்டு ஆட்டத் திலும் ஜெயிக்காவிட்டால் அடுத்த கட்டத் துக்குப் போக முடியாது. ஆனால், இப் போதைய போட்டி அப்படி இல்லை. இரண்டாம் முறையாக உலக சாம்பியன் ஆகி இருப்பதால், இந்த முறை மீடியா கவனம் சற்று அதிகமாக இருக்கிறது. டெல்லியிலும், சென்னையிலும் எனக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு என்னை திக்கு முக்காடச் செய்துவிட்டது. என் வாழ்க் கையில் இதுபோன்ற ஓர் அங்கீகாரம் எனக்குக் கிடைத்ததே இல்லை.''

**வெற்றி பெற்றவுடன், 'கிரிக்கெட் வீரர்களுக்கு அளிப்பதைப்போல எனக்கு வரவேற்பு அளிக்கிறார்களா பார்க்கிறேன்' என்று சொன்னீர்களே! கிரிக்கெட் மீதும், கிரிக்கெட் வீரர்கள் மீதும் அப்படியென்ன வெறுப்பு?**

''இந்திய கிரிக்கெட் அணி உலகக் கோப்பை வென்றதும், நான் உலக சாம்பியன் ஆனதும் ஏறத்தாழ ஒரே சம யத்தில் நடந்தன. அவர்களுக்கு நாடு முழுக்க ஏகோபித்த பாராட்டு. அதைப் பார்த்தபோது, 'நானும் தனி ஒரு மனிதனாக முயற்சி செய்து, செஸ்ஸில் உலக சாம்பியன் பட்டம் வென்றிருக்கிறேன். எனக்கும் இதுபோல அங்கீகாரம் கிடைக்கிறதா பார்க்கலாம்' என்று ஒரு சின்ன எதிர் பார்ப்பு. அதன் வெளிப்பாடுதான் அந்த வார்த்தைகளே தவிர, கிரிக்கெட்டைக் குறை சொல்வதற்காக இல்லை. கிரிக் கெட்டையும் செஸ்சையும் ஒப்பிட்டுப் பேசுவது சரியல்ல.''

**உங்கள் வெற்றிக்கு எதை எல்லாம் காரணமாகச் சொல்வீர்கள்?**

''முறையான பயிற்சி, கடுமையான உழைப்பு, குடும்பத்தினரது சப்போர்ட், மனம் தளராத விடாமுயற்சி என்று பலவற்றைச் சொல்லலாம் என்றாலும், மிக முக்கியமானது சந்தோஷமாக ஆட வேண்டும் என்ற ஆர்வம். இதுதான் இன்று என்னை இந்த நிலைமைக்கு உயர்த்தியிருக் கிறது. வாழ்க்கையில் செஸ் எனக்கு ஒரு வினாடிகூட சலிப்பு ஏற்படுத்தியதில்லை. எப்போது செஸ் பற்றி நினைத்தாலும் செஸ் போர்டு முன்னால் உட்கார்ந்தாலும் ஒரு புத்துணர்வும், மகிழ்ச்சியும் என்னைத் தொற்றிக் கொண்டுவிடும்.''

**நூறு கோடி இந்தியர்கள் இருக்கிறோம். ஆனால், ஒலிம்பிக்சில் ஒரு தங்க மெடல் கூட வாங்க முடியவில்லையே...?**

''இது வருத்தமளிக்கும் உண்மை. அதிக மக்கள் தொகை ஒரு காரணம் என்றால்,

சீனாவில் நம்மைவிட அதிக மக்கள் வசிக்கிறார்கள்; அவர்களால் பதக்கங்களை வாங்கிக் குவிக்க முடிகிறது. பயிற்சி வசதிகள் இல்லை என்று காரணம் சொன்னால், நம்மைவிட பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கிய எதியோப்பியாவால் கூட ஒரு பதக்கம் வெல்ல முடிகிறது. இதுதான் காரணம் என்று சரியாக எதையும் நம்மால் குறிப்பிட முடியவில்லை. என்ன காரணம் என்று அலசிக் கொண்டிருப்பதை விட, என்ன செய்ய வேண்டும் என்று திட்டமிட்டுச் செயலில் இறங்கினால், நம்மாலும் நிச்சயம் ஜெயிக்க முடியும்.''

**ரஷ்யாவில் மட்டும் எப்படி ஏகப்பட்ட செஸ் சாம்பியன்கள் உருவாகிறார்கள்?**

''1920களிலிருந்தே அங்கே செஸ் விளையாட்டுக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டு வருகிறது. பள்ளிக்கூடங்களில் செஸ் விளையாட்டை பாடத் திட்டத்திலேயே சேர்த்திருக்கிறார்கள். அங்கே செஸ் வளர்ச்சிக்கு அரசாங்கம் பெரும் ஆதரவு அளிக்கிறது. இதனால் மக்கள் மத்தியில் செஸ் ஆர்வம் அதிகமாக இருக்கிறது. உலக அளவில் செஸ் சாம்பியன்களை உருவாக்குவதற்கு அங்கே முக்கியத்துவம் தரப்படுகிறது. இங்கே கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குக் கிடைக்கிற பேரும், புகழும் அங்கே செஸ் ஆட்டக்காரர்களுக்குக் கிடைக்கிறது.''

**ஒரு பயிற்சியாளரிடம் பயிற்சி பெறுவதற்கும் கம்ப்யூட்டர் மூலமாகப் பயிற்சி பெறுவதற்கும் என்ன வித்தியாசம்?**

''தொழில்நுட்பத்தைப் பயிற்சிக்குப் பயன்படுத்தி, திறமையை வளர்த்துக் கொள்வது புத்திசாலித்தனம். அதனால் பல நன்மைகள் உண்டு. பலவிதச் சிக்கலான 'மூவ்'களைக் கொடுத்து, எப்படித் தீர்ப்பது என்று கேட்டால், அழகாகத் தீர்வு சொல்லி விடும். ஆனால், பிராக்டிக்கலான டிப்ஸ்களைக் கொடுக்க கம்ப்யூட்டரால்



முடியாது. பயிற்சியாளர் என்பது இயந்திரத்தனமாக இல்லாமல் ஓர் அனுபவம் வாய்ந்த மனிதரிடம் பயிற்சி பெறுவது. எனவே, கம்ப்யூட்டரும் பயிற்சியாளரும் இணைந்து பயிற்சியளிப்பதுதான் சிறந்தது.''

**சென்னையிலிருந்து ஸ்பெயின் நாட்டுக்கு ஏன் இடம்பெயர்ந்தீர்கள்?**

''பெரும்பாலான செஸ் போட்டிகள் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும்தான் நடைபெறுகின்றன. இந்தியாவிலிருந்து கொண்டு அடிக்கடி அங்கு சென்று வருவது சிரமமாக இருந்ததால், ஐரோப்பாவில் தங்க முடிவு செய்தேன். எதேச்சையாக ஒரு ஸ்பெயின் நாட்டு செஸ் ரசிகத் தம்பதியரின் நட்பு கிடைத்தது. அவர்கள் மூலமாக ஸ்பெயின் பற்றித் தெரிந்துகொண்டேன். அங்கேயே தங்குவது என்று முடிவு செய்தேன். அது ஓர் அழகான நாடு. அங்கே உலகமெங்குமிருந்து ஆண்டுக்கு ஐந்து கோடிக்கும் அதிகமான டூரிஸ்ட்கள் வருகிறார்கள். நல்ல க்ளைமேட்; மக்கள் நன்றாகப் பழகுகிறார்கள். நம்மை அந்நியர்களாகக் கருதுவதில்லை.''



* மனைவியுடன் ஆனந்த்...

**உங்கள் வெற்றியில் உங்கள் மனைவியின் பங்கு என்ன?**

''அருணா வந்த பிறகு எனக்கு வாழ்க்கை ஈஸியாகிவிட்டது. 'நீங்கள் செஸ்சில் கவனம் செலுத்துங்கள். மற்றவற்றை எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன்' என்று சொல்லிவிட்டார். எனவே, என்னுடைய வெற்றிகளுக்கு எல்லாம் அவர் பக்கபலமாக இருக்கிறார்.''

**உங்கள் வாழ்க்கை வரலாற்றை புத்தகமாக எழுதப் போவதாக அறிவித்து இரண்டு வருடமாகப் போகிறதே! எப்போது வெளிவரப்போகிறது?**

''எழுத ஆரம்பித்துவிட்டேன். ஆனால், இடையில் பயிற்சி, போட்டிகள், பயணம் என்று பிஸியாகிவிட்டதால் அந்த வேலை நின்றுவிட்டது. அதுவும்கூட ஒரு விதத்தில் நல்லது என்று நினைக்கிறேன். இந்த உலக சாம்பியன்ஷிப் உள்ளிட்ட பல லேட்டஸ்ட் தகவல்களும் புத்தகத்தில் சேர்த்துக்கொள்ளலாமில்லையா? அடுத்த வருடத்தில் கண்டிப்பாக வெளியாகிவிடும்.''

**செஸ் ஆடாத நேரத்தில்கூட குதிரைகளும், யானைகளும், வீரர்களும் மண்டைக்குள் புகுந்துகொண்டு ஏகத்துக்கு டென்ஷன் கொடுப்பார்களே! எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

''மனதை எப்போதுமே அமைதியாக வைத்துக்கொள்ள முயற்சி செய்கிறேன். அவசியமானபோது மூச்சுப் பயிற்சி செய்கிறேன். அவ்வப்போது தியானத்திலும் ஈடுபடுவதுண்டு. நிறைய இசை கேட்கிறேன். நான் ஜிம்முக்குள் நுழைந்துவிட்டால் செஸ் ஆட்டத்தையே சுத்தமாக மறந்துவிடுவேன்.''

**- எஸ்.சந்திரமௌலி**

அட்டை மற்றும் படங்கள்: ஸ்ரீஹரி

அடுத்த இதழ்...

# இன்பம் பொங்கும்

...ம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்...

உற்சாகத்துக்கு...



## ரஜினி ரூட்!

இயக்குநர்
எஸ்.பி.முத்துராமன்
எழுதும் ரஜினியின்
உள்ளும் புறமும்
குறித்த
உற்சாகத் தொடர்

உத்வேகத்துக்கு...



## ஆயிரத்தில் ஒருவன்!

சேவாலயா முரளிதரன்
செதுக்கும் இளைஞர்
முன்னேற்றத்
தொடர்!

...ரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்ப...

**இது மட்டுமா?**

★ வாசகர்களின் மின்னல் கதைகள்..

★ தூறல் கவிதைகள்...

அதிக பக்கங்கள்! அதே விலை!!

# தீபாவளிச் சிறப்பிதழ்!

ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்

அனுபவத்துக்கு...



## 70 முதல் 7 வரை...

கல்கி ராஜேந்திரன் படைக்கும் அனுபவ விருந்து!

அழகியலுக்கு...



## செவக்காட்டுச் சித்திரங்கள்!

'ஏலேய்' இராமசாமியின் மண் மணம் கமழும் கிராமத்து ஆட்டோகிராஃப்!

ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்பம்... ஆரம்

★ இடி சிரிப்ஸ்...

# எல்லாம் இன்பமயம்!



# கல்கி



2007 நவம்பர் 4
சர்வஜித் ஐப்பசி 18
மலர் : 66
இதழ் : 14

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## நொறுங்கி விழும் நம்பிக்கை!

**கோ**வை உக்கடம் பகுதியில் குடிசை மாற்று வாரியக் குடியிருப்புகள் இடிந்து விழுந்து பதின்மூன்று உயிர்களைப் பலிகொண்டது பரிதாபம் மட்டுமல்ல; நமக்கு மிகப்பெரிய அவமானமும்கூட. எங்கு பார்த்தாலும் நவீன பல மாடிக் கட்டடங்கள் எழுந்த வண்ணம் இருக்க, நாட்டின் பொருளாதார வளர்ச்சி ஒன்பது சதவிகிதத்தை எட்டியிருக்க... எளிய மக்கள் வாழ்க்கையில் மட்டும் இன்னும் விடியல் தோன்றாமலே இருக்கிறது. இதுபோன்ற விபத்துகள் நிகழும்போது அரசு வாரியங்கள் பேரில் உள்ள நம்பிக்கையும் நொறுங்கி விழுகிறது.

இறந்துபோனவர்களின் குடும்பங்களுக்கு இரண்டு இலட்சம் ரூபாயும் காயமுற்ற பலருக்குத் தலா 25,000 ரூபாயும் நஷ்டஈடு அறிவித்துள்ளார் முதல்வர். தற்காலிகமாக அவசர செலவுகளுக்கு இத்தொகை உதவும். ஆனால், போன உயிர்கள் மீள மாட்டா. பெறற்கரிய அந்த மனித வளம், ஜீவ சக்தி, வடிகட்டிய அலட்சியப் போக்குக்குப் பலியாகியிருக்கிறது.

குடிசைக்கு மாற்றாகக் கட்டித் தரப்படும் குடியிருப்பு, குடிசையைக் காட்டிலும் மோசமாக இருப்பதில் என்ன பயன்?!

குடிசை வீட்டைப் பராமரித்துக் கீற்று மாற்றுவது எளிய மக்களுக்குக் கட்டுப்படியாகிற விஷயம். கல் கட்டடங்களைப் பாதுகாத்துப் பராமரிக்கும் செலவு அவர்களுக்குப் பெருஞ்சுமை.

இவ்வாறிருக்க, குடிசை மாற்று வாரியக் குடியிருப்புகளின் பராமரிப்பை அரசு அலட்சியப்படுத்துவதுடன் அக்கட்டடங்






களைச் சிறந்த முறையில் கட்டுவதும் இல்லை. இந்தக் கட்டட காண்ட்ராக்ட்டுகளில் ஏகப்பட்ட இலஞ்ச-ஊழல் புகுந்து விளையாடுகிறது! சிமெண்டும் கான்க்ரீட்டும் கொண்டு கட்டப்படும் கட்டடங்கள் ஐம்பது அறுபது ஆண்டுகளாவது நீடிக்க வேண்டும். ஆனால், பெரும்பாலான குடிசை மாற்று வாரியக் கட்டடங்கள் பத்துப் பதினைந்து ஆண்டுகளிலேயே பல்லிளிக்க ஆரம்பித்துவிடுகின்றன; ஒரு பலத்த மழை பெய்தால் விழுந்து நொறுங்கிவிடுகின்றன.

கோவை விபத்துக்குப் பிறகு ஏராளமான குடிசை மாற்று வாரியக் கட்டடங்களை இடித்துவிட்டுப் புதிய கட்டடங்கள் எழுப்பத் திட்டமிடப்படுகிறது. இதனால், ஒரே காரியத்துக்கு வரிப்பணம் மும்மடங்கு செலவாகிறது என்பதோடு, மறுபடியும் இலஞ்ச ஊழல் விளையாடவே வழி வகுக்கப்படுகிறது.

மனிதனின் அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, உறைவிடம். இவற்றை அவனே தேடிக்கொள்வதுதான் கௌரவம்; அழகும்கூட. அதற்கான சூழலை உருவாக்கு வதுதான் அரசின் பொறுப்பும் கடமையும் ஆகுமேயொழிய, இந்த மூன்றையும் வேறு பலவற்றையும் அவனுக்கு இலவசமாகத் தூக்கித் தருவது அல்ல!

அவ்வாறு தர முற்படுகிறபோது, ஒரு சிலருக்கு மட்டுமே அவை கிடைக்கின்றன. மற்றவர்கள் குடிசைகளிலேயேதான் வாழ்கிறார்கள். கழிப்பறை, குளியலறை வசதிகள்கூட இவர்களுக்குப் போதுமான அளவில் இல்லை. இருக்கும் ஒரு சிலவற்றிலோ சுகாதாரமே இல்லை.

கிராமங்களில் பிழைப்புக்கே வழியின்றி மக்கள் நகரங்கள் நோக்கி இடம் பெயர்வதால்தான் சேரிகள் உருவாகின்றன. அவ்வாறு அவர்கள் இடம் பெயர்வதற்கான அவசியம் ஏற்படாமல், கிராம வளத்திலும் கிராமப் பொருளாதாரத்தின் மீதும் அரசு கவனம் திருப்பி, அங்கே வாழும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முற்பட வேண்டும்.

அரசுப் பொறுப்பில் உள்ளவர்களிடம் துல்லியமும் நேர்மையும் தொலைநோக்கும் இல்லாதவரையில் உக்கடம் விபத்து போன்ற துயரங்கள் தொடரவே செய்யும். ●

# அவர் அவர் இல்லை!

உற்சாகத்தில் இருக்கிறார் டைரக்டர் தமிழ்வாணன். தீபாவளிக்கு வெளிவர விருக்கும் இவரது 'மச்சக்காரன்' மிகுந்த எதிர்பார்ப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

''நடிகர் ஜீவன் இதுவரை நடிச்ச படங்கள்ல வில்லத்தனம் கலந்த ஹீரோவாத்தான் பண்ணியிருக்காரு. ஆனால், 'மச்சக்காரன்'ல ஹீரோவாவே வர்றாரு. ரசிகர்கள் அவரை எப்படி ஏத்துக்கப் போறாங்கன்னு ஒரு கேள்வி இருக்கு. அந்தக் கேள்விக்குறிய ஆச்சர்யக்குறியா மாத்தப்போற வித்தையைத்தான் நீங்க ஸ்க்ரீன்ல பார்க்கப் போறீங்க'' என்கிறார் தமிழ்வாணன்.

'உங்களின் முந்தைய படமான கள்வனின் காதலி சரியாப் போகலியே...' என்றால், ''ரசிகர்களோட நாடித் துடிப்பைச் சரியா கணிக்கத் தெரிஞ்ச ஒருத்தர் இனிமே பொறந்தாத்தான் உண்டு. அந்த விதத்துல பார்க்கும்போது எல்லா விஷயத்துல இருந்தும் பாடம் கத்துக்கறதைத்தான் நான் பெருசா நினைக்கிறேன்'' என்கிறார்.

'மச்சக்காரன் பட டைட்டில்லயே ஒரு மாதிரி வாசம் வீசுதே' என்று நாம் முடிப்பதற்குள் பாய்ந்து வருகிறது பதில்.

''அதிர்ஷ்டக்காரனை நாம பொதுவா மச்சக்காரன்னுதான் சொல்லுவோம். அந்த அர்த்தத்துலதான் பேர் வெச்சிருக்கேன். மத்தபடி ஆபாசம், அருவருப்பு எதுக்கும் இங்க இடம் இல்லை. வாழ்க்கைல அதிர்ஷ்டமே இல்லாத ஒருத்தனுக்கு, அதிர்ஷ்டமே வாழ்க்கையா வாய்க்கப் பெற்ற ஒரு பொண்ணு கிடைச்சா எப்படியிருக்கும்ங்கறதைத்தான் சராசரி ரசிகனுக்கும் பிடிக்கிற மாதிரி ரசனையோடு சொல்லியிருக்கேன்'' என்று விளக்கம் கொடுத்தவர், ஜீவன் நடிப்பு குறித்தும் சிலாகித்துப் பேசினார்.

''ஜீவன் ஓர் அற்புதமான நடிகர். இந்தப் படத்துல அவர் பெர்ஃபாமென்ஸ் பார்த்து அரண்டு போயிட்டேன். இயக்குநர்களின் நடிகன்னு சொன்னாக்கூட பொருத்தமாத்தான் இருக்கும். இதுல அவர் அவராவே இல்லை; அதுக்கும் மேல. கதாநாயகி காம்னாவையும் குறைச்சு மதிப்பிட முடியாது. எந்த டைப் பாத்திரத்துக்கும் சரியாப் பொருந்துறாங்க. முக்கியமா சொல்ல வேண்டிய நபர் யுவன் சங்கர்ராஜா. ச்சும்மா மிரட்டியிருக்கார். இந்த ஆண்டின் சூப்பர் மியூசிக்ல ஒண்ணா வலம் வரப்போகுது பாருங்க.''

''சரி, ஏன் எப்பவும் தாடி?''

''ஆடிக்குப் பின்னாடி ஆவணி, என் தாடிக்குப் பின்னாடி ஒரு தாவணிங்கற கதையெல்லாம் இல்ல. சும்மா, எடுக்கத் தோணல. எனக்கே பிடிக்காதப்ப எடுக்கத் தயங்க மாட்டேன். எதுலயும் நம்மோட விருப்பத்துக்கு முன்னுரிமை கொடுத்து செஞ்சாத்தான் வாழ்க்கை சுவாரஸ்யமா இருக்கும்'' என்று சிரிக்கிறார் தமிழ்வாணன்.

- மதுமிதா

படம் : பொள்ளாச்சி சுந்தரம்



* தமிழ்வாணன்

## நாம் காதலிக்கும் பெண் சொல்வதும் செய்வதும் எப்போதும் சரியாகவே இருக்கும்!

-ஆல்ஃபிரெட் எத முஸ்ஸே

''இதுதான்... உன் முடிவா?'' - கேட்கையிலேயே கதிரேசனுக்கு அழுகை வரும் போலிருந்தது. அழக்கூடாது... இவள் முன்னால் அழுவது அசிங்கம் - கதிர் முகம் திருப்பி, எங்கோ வெறித்து உள்ளுக்குள் தன்னை அடக்கிக் கொண்டான். அவளிடமிருந்து எந்தப் பதிலும் வரவில்லை. இயல்பாகத் திரும்பி அழுத்தமாய் அவளைப் பார்த்தான்.

கல்பனா, இவன் கேட்டது காதில் விழாததுபோல கடலை வெறித்தபடி உட்கார்ந்திருந்தாள்.

ஒரு கணம் மௌனமாக அவளைப் பார்த்திருந்துவிட்டு...

''சொல்லு கல்பனா, இதுதான் உன் முடிவா?''

விருட்டென திரும்பிப் பார்த்தாள்.

''என்னை ஏன் இப்படி சித்ரவதை பண்றீங்க கதிர்?''

''கல்பனா! நான்...'' தடுத்து... ''இன்னும் எத்தனை நாளைக்கு இப்படி பார்க்ல பார்த்துக்கிட்டும், பீச்ல பேசிக்கிட்டும் இருக்கறது? இந்தக் கனவு, கவிதை... எல்லாம் கொஞ்சம் கொஞ்சமா அலுத்துக்கிட்டு வருது கதிர்!''

''நம்ம காதலும்கூடவா கல்பனா?''

''ப்ளீஸ் கதிர் புரிஞ்சிக்கோங்க! என்னால் சமாளிக்க முடியலே. மூத்த தங்கச்சி காலேஜ் முடிச்சி வேலைக்குப் போக ஆரம்பிச்சிட்டா. கண்ணாடி முன்னால

ஆர்.எஸ்.பாலமுருகன்

**காதல் பொன்மொழிக் கதை - 14**

# கல்பனா... கதிர்... காதல்!

நின்னு சினிமா பாட்டா பாடுறா. அத்தனையும் காதல் பாட்டு!

நான் நகர்ந்து அவளுக்கு வழிவிட வேண்டிய நேரம் வந்தாச்சு. இதுக்கு மேலேயும் வீடு கேட்குற கேள்விக்கு நான் மௌனமா இருந்தா... எல்லாருக்குமே அசிங்கமாயிடும் கதிர்!''

''கல்பனா... ஆஸ்கார் ஃபிலிம்ஸ்ல கதை சொல்லியிருக்கேன். கண்டிப்பா அது ஓ.கே. ஆயிடும். படம் பூஜை போடுற அன்னிக்கு உன் வீட்டுல வந்து பேசுறேன். எனக்கு நம்பிக்கையிருக்கு கல்பனா! இன்னும் கொஞ்ச நாள்... எனக்காக... ப்ளீஸ்!''

''கொஞ்ச நாள்... கொஞ்ச நாள்னு இன்னும் எத்தனை கொஞ்ச நாள் கதிர்? நாம காதலிக்க ஆரம்பிச்சு கிட்டத்தட்ட ஆறு வருஷம் முடியப்போகுது. அன்னையிலே இருந்து இதைத்தான் சொல்லிக்கிட்டு இருக்கீங்க! வந்த மாப்பிள்ளை எல்லாத்தையும் ஏதேதோ காரணம் சொல்லி, தட்டிக் கழிச்சிட்டேன். இதுக்கு மேல காரணங்கள் தேட எனக்குத் தெம்பு இல்லே கதிர்!'' - என்றவள்... கதிரின் சோகமுகம் கண்டு சற்றுக் கனிவாக ''நான் உங்களைக் குறை சொல்லலே! இதான் யதார்த்தம்னு சொல்றேன். என் நிலைமையிலே இருந்து யோசிச்சுப் பாருங்க. உங்களுக்கே புரியும்.''

இனி பேச ஒன்றும் இல்லை என்பது போல் முகம் திருப்பிக் கடல் வெறிக்கத் தொடங்கினாள் கல்பனா.

திடீரென எங்கிருந்தோ கிளம்பிய காற்று சுழன்றடித்து கடற்கரை மணலை மேலே தெறித்தது. நான்கு மணிக்கே வெயில் காணாமல் போய், திடீர் மழை வரும் போலிருந்தது.

**க**ல்பனாவை கதிர் முதல் தடவை சந்தித்தது ஒரு மழை நாளில்தான்! ஆனால், அன்று பெய்தது செயற்கை மழை. நாலா பக்கமிருந்தும் லாரிகளில் தண்ணீர் பீச்சியடிக்க, ஹீரோவும் ஹீரோயினும் நனைந்தபடியே ஆடுகின்ற சினிமா மழை. ஹீரோயினுடன் ஆடிய ஆறு பெண்களில் கல்பனாவும் ஒருத்தி. அவளை கதிர் பார்த்த நிமிஷத்தில் சினிமாக்களில் வருவது போல கடலலைகள், பறவைகள், மரங்கள் ஃப்ரீஸ் ஆகி நிற்கவில்லை. இயல்பாகவே இருந்தன. ஒரு அசிஸ்டெண்ட் டைரக்டருக்கும், குரூப் டான்ஸருக்குமான இயல்பிலேயே அந்தச் சந்திப்பும் நிகழ்ந்து முடிந்தது.

அடுத்த சந்திப்பு நிகழ்ந்தது ஒரு பொன்மாலைப் பொழுதில்! கதிர், தன் நண்பன் குமாரைப் பார்க்க தசரதபுரத்தில் இருக்கும் அவன் ரூமுக்குப் போனபோது, அந்த ரூமின் கீழ்போர்ஷன் வாசலில் நைட்டி அணிந்த கல்பனா, காய்கறி வண்டியில் பேரம் பேசிக் கொண்டிருந்தாள்.

இவனைக் கண்டதும் புன்னகைத்து, ''என்னங்க! குமாரைப் பார்க்க வந்தீங்களா?'' என்றாள்.

''ஆமாம்! இதான், உங்க வீடா?''

''ம்!'' என்றாள். ஆனால், அழகான...'ம்!'

## நூற்றுக்கு நூறு!

**ச**ன் டி.வி.யின் மிக முக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்றாக மாறியிருக்கிறது 'மஸ்தானா மஸ்தானா' சின்னத் திரைக் கலைஞர்களின் நடன நிகழ்ச்சி. இதில் நடுவராகக் கலந்துகொண்டிருக்கும் நடிகை மீனா, இந்த நிகழ்ச்சி பற்றிக் கூறும்போது, "நான் இதுவரை எத்தனையோ நடனம் தொடர்பான விஷயங்களில் பங்கேற்றிருக்கிறேன். ஆனால் 'மஸ்தானா' மாதிரி ஒரு கலகல கான்செப்ட் கொண்டதை இப்போதுதான் பார்க்கிறேன். அடித்துக் கொள்ளாமல், அழாமல் ஒருவருக்கொருவர் வெற்றி, தோல்விகளை ஸ்போர்ட்டிவாக எடுத்துக் கொள்ளும் கலைஞர்களைப் பார்த்து பிரமித்து விட்டேன். மிக விரைவில் தமிழ் தொலைக்காட்சிகளிலேயே நம்பர் ஒன் நடன நிகழ்ச்சியாக 'மஸ்தானா' பெயர் வாங்கப்போவதில் சிறிதும் ஐயமில்லை" என்றார். இன்னொரு நடுவரான தருண் குமார், "மீனா சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை" என்றார்.

– **கலை**



**க**திர் மனதில் காதல் விதை விழுந்தது மூன்றாவது சந்திப்பில்தான்! அது, அசோகமித்ரன் சிறுகதை நூல் வெளியீட்டு விழா. இயல்பாகவே இது போன்ற விஷயங்களில் ஆர்வம் கொண்ட கதிர், அந்த வெளியீட்டு விழாவுக்கும் சென்றிருந்தான். ஆச்சரியமாய் அங்கு கல்பனாவும் வந்திருந்தாள். விழா முடிந்து, தேனாம்பேட்டை சிக்னல் நோக்கி நடந்தார்கள்.

"நம்பவே முடியலே கல்பனா! அமாவாசைக்கும், அப்துல் காதருக்கும் இருக்குற சம்பந்தம் மாதிரி ஒரு சினிமா டான்ஸருக்கும், அசோகமித்ரனுக்கும் இருக்குற சம்பந்தம். ரொம்ப விசித்திரமா இருக்கு. எப்படி இது?"

"படிப்புதான் சம்பந்தம் கதிர்! அப்பா சைதாப்பேட்டை கார்ப்பரேஷன் ஸ்கூல் தமிழ் வாத்தியார். அவரோட வருமானத்தை வெச்சுக்கிட்டு, எங்களுக்குப் பெரியளவுல வசதியான வாழ்க்கையை அமைச்சுக் கொடுக்க முடியலயே தவிர, ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம்னுதான் எங்களை வளர்த்தார். வாழ்க்கையிலே எல்லாத்தையும் தெரிஞ்சிக்கணும்னு சொல்லிச் சொல்லி என் ரசனைகளை வளர்த்தார்!

சந்தோஷமா ப்ளஸ் - டூ முடிச்சேன். அடுத்தது என்ன படிக்கலாம்னு ஆர்வமா யோசிச்சிக்கிட்டு இருக்குறப்போ... தமிழ் சினிமா இன்டர்வெல் சீன் மாதிரி என் வாழ்க்கையிலேயும் ஒரு 'திடுக்' திருப்பம்! அப்பாவுக்கு பேரலிஸிஸ் அட்டாக். நான் திகைச்சுப் போய் நின்ன நிமிஷம் அது.

பாரம் மொத்தமும் என் தோள்லே! எனக்கு டான்ஸ் ஆடத் தெரியும். கவிதை எழுத வரும். ப்ளஸ் - டூ படிச்சிருக்கேன். கம்ப்யூட்டர், டைப்ரைட்டிங் தெரியும். என்னோட இத்தனை தகுதிகள்லே உடனடியா எனக்கு ஒரு வருமானத்துக்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தது, என் டான்ஸ் திறமைதான்! அப்பாவோட ஃப்ரெண்ட் ஒருத்தர் மூலமா கலா மாஸ்டர்கிட்டே சேர்ந்தேன். என் வாழ்க்கையிலே செகண்ட் ஆஃப் ஆரம்பம்!"- மெர்க்குரி விளக்குகள் ஒளிர... ஒரு தேவதை போல் பேசிக்கொண்டே துணை வந்த கல்பனாவை கதிருக்கு மிகவும் பிடித்துப் போயிற்று.

**"என்னை நானே திட்டிக்கிட்டு... எனக்குள்ளேயே அழுதுக்கிட்டு, ரோடு ஏறினதும் கண்ணைத் துடைச்சிட்டு பஸ் ஏறிடுவேன்!"**

அடுத்தடுத்த சந்திப்புகளில் காதல் விதை பூமி கிளர்ந்து, செடியாய் முளைத்து வெளிவந்தது. இலை துளிர்த்து பூ பூத்தது. இருப்பினும், வாய்விட்டு காதலைப் பகிரத் தயக்கமாக இருந்தது. 'ஐ லவ் யூ' என்கிற மூன்று வார்த்தைகளில் முழுக்க மனசைச் சொல்லிவிட முடியுமா எனத் தவித்தான். இதே தவிப்பு கல்பனாவுக்கும் இருந்திருக்க வேண்டும். இருவரும் சொல்லிக்கொள்ளவே இல்லை! ஆனால், பரஸ்பரம் காதலை உணர்கின்ற - உணர்த்து கின்ற சந்தர்ப்பமும் ஒரு பூ மலர்கின்ற இயல்பில் வாய்த்தது.

கதிர் இயக்கியிருந்த குறும்படம் ஒன்று ஃபிலிம் சேம்பரில் திரையிடப் பட்டது. அன்று திரையிடப்பட்ட எட்டுப் படங்களில் அவன் படத்துக்கு அதிகக் கைதட்டல்களும், பாராட்டுகளும் கிடைத் தன. இயக்குனர் பாலுமகேந்திரா மேடை யில் கட்டி அணைத்துக்கொண்டார். அன் றைய பின்னிரவில் குமார் ரூமை ஒட்டிய விஸ்தாரமான மொட்டை மாடியின் மெல்லிய நிலா வெளிச்சத்தில் கல்பனா மௌனமாய் நின்றிருந்தாள், கூடவே கதிர்.

குறுகுறுத்த பார்வையுடன்... "என்ன கல்பனா... நீ ஒண்ணுமே சொல்லலே; படம் பிடிக்கலியா?" என்றவனின் அருகில் வந்து, அவன் கைகளை அழுத்தமாகப் பிடித்துக்கொண்டாள்.

அன்று கைப்பிடித்த காதல், காலம் முழுக்கத் தொடரும் என கதிர் நம்பினான். ஆனால்... இதோ, கையசைத்து விடை பெறுகிறாள் கல்பனா!

பேச்சற்று யோசனையில் அமர்ந்திருந் தவனை ஆழமாக நோக்கினாள்.

"கதிர், இது நான் விரும்பி எடுத்த முடிவு இல்லேன்னு உங்களுக்கே நல்லா தெரியும். என்னோட கல்யாணம், அப்பா வோட வைத்திய செலவு, தம்பி, தங்கச் சிங்க எதிர்காலம்... இதெல்லாம் மட்டு மில்லே, 'இப்பவே வா, ஏதாவது ஒரு கோயில்ல வெச்சி தாலி கட்டி, உன்னை மனைவியாக்கிக்கிறேன்'னு சொல்ல முடி யாத உங்க தயக்கம், மௌனமும்கூட காரணம்தான். இப்ப ரெடின்னு நீங்க சொல் லுங்க... அப்பா ஆசிர்வாதத்தோட வாழ்க்கையை ஆரம்பிக்க லாம்."



"கல்பனா..." - எனத் தயங்க...

"தெரியும் கதிர்! உங்களாலே முடியாது. என்னைக் காரணம் காட்டி உங்க கனவை நாசமாக்க நான் விரும்பலே. நீங்க ஜெயிக் கணும்; படம் பண்ணணும்! அதுக்கு நான் இப்ப இடைஞ்சல். உங்களை ரெண்டுங் கெட்டானா அல்லாட விட்டுக்கிட்டிருக் கேன். போதும் கதிர். இந்த நிமிஷம் வலிச் சாலும் இந்தப் பிரிவுதான் நல்லது. உங் களுக்கு... எனக்கு... என் குடும்பத்துக்கு... எல்லாத்துக்கும்!" - சலனமற்று இருந்தான் கதிர்.

"எல்லாம் கொஞ்ச நாளைக்குத்தான்! மறக்க முடியாம மனசு மருகித் தவிக்கும் தான். பிரிவு பேரவஸ்தையாய் இருக் கும்தான். விலகி நடக்க ஆரம்பிச்சிட்டா அவங்க அவங்களுக்குன்னு ஏற்படுற சோகங்கள், போராட்டங்கள், பிரச்னை கள்லே இந்தப் பிரிவு வேதனை எந்த இடைஞ்சலும் பண்ணாம மனசோட அடி யாழத்துல அமிழ்ந்து போயிடும்" என்ற வள், ஒரு கணம் மௌனமாகப் பார்த்தாள். "நான் கிளம்புறேன் கதிர்!" - மணல் உதறி எழுந்தாள்.

"இரு கல்பனா... பஸ் ஸ்டாப் வரைக் கும் நானும் வரேன்"

"வேணாம் கதிர்! தனியா நடக்கணும் போலிருக்கு. என்னை நானே திட்டிக் கிட்டு... எனக்குள்ளேயே அழுதுக்கிட்டு, ரோடு ஏறினதும் கண்ணைத் துடைச்சிட்டு பஸ் ஏறிடுவேன். நீங்க வந்தா அது முடி யாது" காற்று சுழன்றடிக்க கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அவள் மணலில் கால் புதைய நடந்து, விலகி... விலகி... புள்ளியாகி ரோட்டில் ஏறுகின்ற வரையில் கண்ணீர் நிரம்பப் பார்த்தவாறு இருந்தான் கதிர். 'சடசட' வென மழை தொடங்கியது.

# அருள்வாக்கு



படைத்தவர்கள் பலத்தை துஷ்பிரயோகம் செய்யும் போது அதைக்கண்டு பயப்படுவதும், அதே போல் தங்கள் பலத்தைத் துஷ்பிரயோகம் செய்து பலவீனர்களைப் பயமுறுத்துவதும் தேசத்துக்கு நல்லதல்ல. மக்களின் இந்தப் பலவீனம் அரசாங்கத்திலும் தானே பிரதிபலிக்கிறது. மறுபடி நாம் இந்தத் தேசத்தில் பயமில்லாத பிரஜைகளாகத் தலையை நிமிர்த்தி நடக்க வேண்டுமானால், க்ஷத்ர தர்மத்தை விருத்தி செய்ய வேண்டும். தனி மனிதர்கள் உறுதியும் ஆத்ம பலமும் கொண்டிருப்பது, அவர்கள் கட்டுப்பாட்டுடன் ஒன்றுகூடி

# தானாக உயரும்!

**ப**லவீனர்களைப பயமுறுத்தி இம்சை முறையால் பணிய வைக்கிற போக்கு நல்லதல்ல. இந்த மாதிரி செய்கிற உண்ணாவிரதம், கொடும்பாவிக் கொளுத்தல், கிளர்ச்சி போன்றவை உண்மையில் இவற்றைச் செய்கிறவர்களின் பலவீனத்தைத்தான் காட்டுகிறது. தங்களுடைய இலட்சியத்திலுள்ள சத்தியத்தின் சக்தியில் நம்பிக்கை இல்லாததால்தான் இத்தகைய நடவடிக்கைகளை எடுக்கிறார்கள். பெரும்பான்மை பலம் ஐக்கியமாக உழைப்பது, தீமையையும் அடக்குமுறையையும் கண்டு அஞ்சாத நெஞ்சுறுதியுடன் போராடுவது போன்றவை இந்தத் தர்மத்தில் அடக்கம். உலகப் பாதுகாப்பு ஒன்றே இலட்சியமாகக் கொண்டு இந்தத் தர்மத்தை நடத்திக் காட்டினால் நாட்டின் ஒழுக்கம் மிக உயர்ந்த நிலை அடையும். அரசாங்கத்தின் தரமும் தானாகவே உயரும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

As per BIS,
IS:2888-1983.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

Orchard B GCPMSOCN 1167/06

# ரத்தம் கொடுத்தால்

**தா**னங்களில் சிறந்தது ரத்ததானம். ஒவ்வொரு சராசரி மனித உடலிலும் குறைந்தபட்சம் ஐந்து லிட்டர் ரத்தம் இருக்கிறது. ரத்த தானம் கொடுப்பவர்களிடமிருந்து உடல் எடை எவ்வளவு இருந்தாலும் அதிகபட்சமாக அரை லிட்டருக்கு (500 எம்.எல்.) மேல் எடுக்க மாட்டார்கள். ஒரு கிலோ உடல் எடைக்கு 10 எம்.எல். என்ற கணக்கும் உண்டு.

● ஆண்டிபயாடிக் மாத்திரைகள் தொடர்ச்சியாகச் சாப்பிடுபவர்கள், சர்க்கரை நோயாளிகள், கருவுற்ற தாய்மார்கள், பெரிய அறுவை சிகிச்சை செய்துகொண்டவர்கள், குடிப்பழக்கம் உள்ளவர்கள் ரத்ததானம் செய்யக்கூடாது. ரத்த அழுத்தம் உள்ளவர்கள், ரத்தம் கொடுப்பதற்கு முன் பரிசோதித்து, டாக்டரின் சம்மதத்துக்குப் பிறகே கொடுக்க வேண்டும்.

● உங்கள் ரத்தத்தை எடுத்த பிறகு உடனே நோயாளிக்குப் பயன்படுத்தக் கொடுத்துவிட மாட்டார்கள். உங்களுக்கு ஹெச்.ஐ.வி பாஸிடிவ் ஆக இருக்கிறதா என்று ஒன்றுக்கு இரண்டுமுறை சோதனை செய்து பார்ப்பார்கள். இது தவிர ஹெபடைடீஸ் பி மற்றும் சி கிருமிகள், சிபிலிஸ் நோய், மலேரியா போன்றவையும் இருக்கிறதா என்று சோதனை செய்துவிட்டே, ரத்தத்தை நோயாளிகளுக்குக் கொடுப்பார்கள்.

● இந்த வகையில் ரத்ததானம் என்பது உடலுக்கு ஒரு மினி சோதனையாகவும் அமைகிறது. லயன்ஸ் கிளப், ரத்த வங்கி, ஜீவன் ரத்த வங்கி ஆகியவை, ரத்தத்தில் குறைபாடுகள் இருக்கும் பட்சத்தில் சம்பந்தப்பட்ட நோயாளிகளுக்குத் தகவல் கொடுக்கின்றன.

● மாற்று உறுப்புகளைப் பொருத்தும் போது, நோயாளிக்கு நெருங்கிய உறவினர்கள் ரத்ததானம் செய்யாமல் இருப்பது நல்லது. காரணம் மரபு ரீதியாக வரும் நோய்க் கிருமிகள், மாற்றாக வைக்கும் உறுப்புகளைத் தாக்கும் ஆபத்து உண்டு.

● 18 வயதுக்கு மேல் 55 வயது வரை



ரத்ததானம் என்பது நமது உடலுக்கு ஒரு மினி சோதனையாகவும் அமைகிறது!

உள்ளவர்கள், நல்ல உடல்நலமும், 50 கிலோ கிராம் எடையும் இருப்பவர்கள் மூன்று மாதங்களுக்கு ஒருமுறை ரத்த தானம் செய்யலாம். பெண்கள் என்றால் நான்கு மாதங்களுக்கு ஒருமுறை கொடுக்கலாம். ரத்தம் எடுக்க அதிக பட்சம் இருபது நிமிடங்கள்தான் ஆகும்.

● ரத்ததானம் செய்யும் முன்னர் உடலில் ஹீமோகுளோபின் அளவைச் சோதிப்பார்கள். குறிப்பிட்ட அளவுக்கு மிகக் குறைவாக இருந்தால் அடுத்த முறை பார்க்கலாம்' என்று அனுப்பி விடுவார்கள்.

# நோய் தெரியும்!

● ரத்தம் கொடுத்த பிறகு, உங்களுடைய அன்றாட அலுவலைக் கவனிக்கச் சென்று விடலாம். ஆனால், உடனே பிஸ்கட், காஃபி, டீ என்று ஏதாவது வயிற்றுக்குப் போட்டுக் கொள்ள வேண்டும்.

● ரத்தப் பிரிவுகளில் ஏ, பி, ஓ மற்றும் ஏபி ஆகியவை முக்கியமான நான்கு பிரிவு கள். இந்த நான்கின் துணைப் பிரிவுகளாக ஒவ்வொன்றுக்கும் பாஸிடிவ், நெகடிவ் என்று இருக்கின்றன. மிக அரிதானது ஏபி நெகடிவ். ஏ1, பி1 என்று இன்னமும் நுண்ணிய பிரிவுகள் இருந்தாலும், அவை கிடைக்காத பட்சத்தில் மருத்துவர்கள் முக் கிய பிரிவுகளிலிருந்து சமாளித்துக்கொள்ள முடியும்.

● இந்தத் துறையில் மருத்துவ அறி வியலின் முன்னேற்றம் பிரமிக்க வைக் கிறது. முன்பெல்லாம் ஒருவரிடமிருந்து எடுக்கப்பட்ட ரத்தம் வேறு ஒருவருக்குத் தான் செலுத்தப்பட்டு வந்தது. இப்போ தெல்லாம் ஒருவரிடமிருந்து பெறப்படும் ரத்தம் பல உயிர்களைக் காக்கப் பயன்படு கிறது. ரத்தத்தில் அடங்கியுள்ள பல் வேறு கூறுகளைத் தனித்தனியாகப் பிரித் துச் சேமித்து வைத்துத் தேவைப்படும் நோயாளிகளுக்கு வழங்கி வருகிறார்கள்.

● திரவமான ரத்தத்தில் திடப் பொருட் களும் உண்டு. அதில் மிதக்கும் சிவப்பு அணுக்கள், ப்ளேட்லெட்ஸ் ஆகியவை திடப் பொருட்கள். ப்ளாஸ்மா என்பது மீதமுள்ள திரவப் பகுதி. இவற்றைத் தவிர புரதங்களும், வேறு சில ரசாயனப் பொருட் களும் சிறிய அளவில் உள் ளன.

● ஒரு நோயாளிக்கு ரத்தம் செலுத்தும்போது மேற்கூறிய வற்றில் ஏதேனும் ஒன்றுதான்



தேவையாக இருக்கும். 'அதை' மட்டும் பிரித்து எடுத்துச் செலுத்திவிட்டு மீதம் உள் ளதை சேமித்து வைத்து, தேவைப்பட்ட நோயாளிகளுக்கு அவற்றைச் செலுத்து கிறார்கள்.

● பெண்களுக்கு அதிக அளவில் ரத்தப் போக்கு இருந்தால் ஈடுகட்டும் விதமாக ப்ளாஸ்மாவை மட்டும் செலுத்துகிறார்கள். அனீமியாவால் பாதிக்கப்படுபவருக்கு சிவப்பு அணுக்களைச் செலுத்தினால் போதும். ரத்தப் புற்றுநோயால் பாதிக்கப் பட்டவர்களுக்கு ப்ளேட்லெட்ஸ் மட் டும்தான் தேவை.

● ரத்ததானம் செய்வதால் நமக்கு எந்த இழப்பும் இல்லை. நம் உடலிலுள்ள சிவப்பு அணுக்களின் ஆயுள் இரண்டு நாட் கள்தான். பழைய அணுக்கள் இறப்பதும், புதியன பிறப்பதும் உடல் இயக்கத்தில் தொடர்ந்து நடைபெற்று வருபவை.

**- கௌசி**



● மனைவி, குழந்தைகளுடன் காந்தன்...

# அரிவாளுடன்

''சி.ஏ. முடித்துவிட்டு இன்று எல்லோரையும் சிரிக்க வைத்துக்கொண்டிருப்பது வாழ்வின் சுவாரஸ்யமான நிகழ்வு'' என்றுதான் தொடங்குகிறார் எஸ்.பி.காந்தன். கலைஞர் டி.வி.யில் திங்கள்தோறும் இரவு பத்து மணிக்கு ஒளிபரப்பாகும் ஹிட் தொடரான 'சிரிசிரி கிரேஸி'யின் இயக்குநர்; கிரேஸி மோகன் நாடகங்களின் ஆஸ்தான டைரக்டர்.

''என்னுடைய அப்பா பாலகிருஷ்ண சாஸ்திரி, வங்கியில் மேனேஜராக இருந்துகொண்டே ஹரிகதை செய்தவர். அண்ணன் மௌலிக்கு எழுத்தாளர், இயக்குனர் எனப் பல அவதாரங்கள். அவரின் திரைப்படங்களில் ஓர் உதவி இயக்குனர் செய்யும் அத்தனை வேலைகளையும் நான் செய்திருக்கிறேன். ஆர்வத்தில் செய்த வேலைகள், பின்னால் என் தொழிலாகவே மாறிவிட்டன.

கிரேஸி மோகன், மாது பாலாஜி, நான் மூவரும் நண்பர்களாக இருந்தபோது 'கிரேஸி கிரியேஷன்ஸ்' என்ற நாடகக் குழுவை ஆரம்பித்தோம். பணத்துக்காக வேறு வேலை செய்தபடி, ஆத்மதிருப்திக்காக ஓய்வு நேரத்தில் நாடகம் போடுவோம். எங்களின் முதல் நாடகம் 1979-ல் போடப்பட்ட 'அலாவுதீனும் 100 வாட்ஸ் பல்பும்!' இதற்குக் கிடைத்த வரவேற்பு கண்டு தீவிரமாய்ச் செயல்பட்டு, இதுவரை நான்காயிரத்துக்கும் அதிகமான மேடை நாடகங்கள் போட்டிருக்கிறோம்.

1987-ல் தொலைக்காட்சித் தொடர்கள் ஆரம்பித்த காலகட்டத்தில், எங்கள் கிரேஸி கிரியேஷன்ஸுக்கும் தொடர் எடுக்கும் வாய்ப்புத் தரப்பட்டது. மௌலியுடன் வேலை பார்த்த அனுபவம் கைகொடுக்க, கிரேஸியின் வேண்டுகோளின்படி இயக்குநரானேன். தனியார் சேனல்களின் வருகை அதிகரிக்கவும், நாங்கள் எல்லா சேனல்களுக்கும் தொடர்கள் செய்து கொடுக்க ஆரம்பித்தோம்'' என்று கூறும் காந்தன், 'ஸ்டுடியோ ட்ரீம்ஸ்' என்கிற கம்பெனி ஆரம்பித்து அதன் மூலம் விளம்பரங்கள், ஆவணப் படங்களும் எடுத்து வருகிறார்.

''எவ்வளவுதான் தொலைக்காட்சித் தொடர்கள் இயக்கினாலும், மக்களின் உடனடி விமர்சனத்தைத் தரும் மேடை நாடகங்கள்தான் சவாலான காரியமாக இன்றைக்கும்

சிரிகுறள்

அத்தை சொத்துக்கு ஆசைப்பட அது
மொத்தமும் போச்சு மாட்டுக்கு

இருக்கின்றன.

ஒரு தடவை மாரியம்மன் கோயில் திருவிழாவுக்கு, தேனி மாவட்டத்தில் எங்களை நாடகம் போட அழைத்திருந்தனர். மேடை நாடகங்களுக்குரிய எந்த இலக்கணமும் இல்லாத மேடை, பாரதிராஜா படத்தில் மட்டுமே பார்த்த கிராமத்து மக்கள் என அங்கிருந்த சூழலைப் பார்த்ததும் எங்களுடைய உற்சாகம் குறைந்துவிட்டது. எங்களுடைய வசனங்களையும்,

# வந்த நாலு பேர்!

எங்கள் நாடகத்தையும் அவர்களால் புரிந்து கொள்ள முடியுமா என்கிற சந்தேகம் பலமாக எழுந்தது.

ஆனால், நாங்கள் எதிர்பார்த்ததைவிட வந்திருந்த அனைரும் எங்களை உற்சாக மழையில் நனைய வைத்துவிட்டார்கள். கதாபாத்திரங்கள் உணர்ச்சிவசப்படும்போது, அதையே பார்வையாளர்களும் பிரதிபலித்தார்கள். கதாநாயகியை விவாகரத்து செய்யப் போவதாகக் கதாநாயகன் கூற, ரசிகர்கள் கூட்டத்தில் திடீர் சலசலப்பு. எட்டிப் பார்த்தால் நான்கு பேர் கையில் அரிவாளுடன் நிற்கிறார்கள். 'அந்தப் புள்ளைய மட்டும் ஏமாத்தின... உனக்கு இருக்குடியேய்' என்று கொதித்து விட்டார்கள். நல்ல நகைச்சுவைக்கு மொழி தடையில்லை என்பதை உணர்த்திய சம்பவம் இது.

பலரும் நினைப்பதுபோல் நகைச்சுவை என்பது எளிதான விஷயம் அல்ல. மற்றவர்களை அழ வைப்பதைவிட கடினமானது சிரிக்க வைப்பது. அதைத் தொழிலாகவே செய்கிறோம் என்பதில் எங்களுக்கு ஏக பெருமை.

இப்போது கலைஞர் டி.வியில் ஒளிபரப்பாகும் 'சிரிசிரி கிரேஸி'க்கும் நல்ல வரவேற்பு. ஜுபிடர் கம்யூனிகேஷன்ஸ் சார்பில் மனோன்மணி சரவணன் தயாரிக்கிறார். அற்புதமான முகப்புப் பாடலை க.ரவி எழுதியிருக்கிறார். பத்தொன்பது வயதே ஆன கௌசிக் பிரமாத இசையைத் தந்திருக்கிறார். ஒவ்வொரு எபிசோட் முடிவிலும் அந்தக் கதைக்கு ஏற்றவாறு 'சிறிகுறள்' ஒன்றை குழந்தைகளை வைத்துச் சொல்லச் சொல்கிறோம். இதைப் பார்த்த பல பெற்றோர், தங்கள் குழந்தைகளும் அதுபோல் சொல்ல வேண்டும் என விரும்புகிறார்கள். திருக்குறளின் பெருமையைச் சொல்லும் விதமாகவே இதனை நாங்கள் தொடங்கியிருக்கிறோம்'' என்றவர், தமது அடுத்த திட்டங்கள் குறித்தும் பேசினார்...




''மிக விரைவில் மாதவன், பிரசன்னா நடிக்கும் படம் ஒன்றை இயக்குகிறேன். காமெடியுடன் ஆக்ஷன் கலந்த படமாக அது இருக்கும். தற்போது இராமநாதபுரம் கிருஷ்ணன் என்கிற மிகப்பெரிய சங்கீத வித்வான் பற்றிய ஆவணப் படம் ஒன்றை இயக்கி வருகிறேன். எந்த வேலை செய்தாலும் ஈடுபாட்டுடனும், ஆர்வத்தோடும் செய்வதுதான் எங்கள் குழுவின் வெற்றியின் ரசகியமாக இருந்திருக்கிறது; இருக்கும்'' என்கிறார் எஸ்.பி.காந்தன்.

– ஜா.தீபா



# ஜாலி ஸ்டோர்ஸ்

**சி**ல வி.ஐ.பி.க்களை இந்த தீபாவளி சீஸனில் தி.நகருக்கு அழைத்துச் சென்று கற்பனை 'ஷாப்பிங்' செய்தோம். அப்போது அவர்கள் அடித்த கமெண்ட்ஸ்...

**சாலமன் பாப்பையா :**

**எ**ன்னய்யா இது அநியாயமா இருக்கு. இவ்வளவு கூட்டமா? கொஞ்சம் விரசா நடந்தா முன்னாடி போறவன் முதுவுல முட்டிக்குவோம் போலிருக்கு. கொஞ்சம் மெதுவா நடந்தா பின்னாடி வர்றவன் மோதித் தள்ளிடுவான் போலிருக்கு. நடக்கற இடத்துல கடையை விரிச்சிருக்கான். தெரியாம கால் பட்டதும் மொறைக்கிறான். 'இன்னா கிழவா? கண்ணு தெரியலையா'ன்னு கேட்கறான். பயமா இருக்குய்யா. எங்கே கத்தியைக் கித்தியை எடுத்துக் குத்திடுவானோன்னு பயமா இருக்குய்யா. அப்படி நடந்தா ஆஸ்பத்திரிக்கு ஓடலாம்னா, இந்தக் கூட்டத்தை விலக்கிப் போறதுக்குள்ளே கைலாசமே போயிடுவோம் போலிருக்கேய்யா. தீபாவளியும் வேணாம். புதுத் துணியும் வேணாம். நான் இப்படியே திரும்பிடறேன். தீபாவளிக்கு பழைய வேட்டியே கட்டிக்கிடறேன். என்னை விட்டுடுய்யா!

**நடிகர் விவேக் :**

**ஆ**கா! ஒட்டுமொத்த தமிழ்நாட்டு ஜனங்களும் 'ஷிப்ட்'டாகி இங்கே வந்துட்டாங்களா? திடீர்னு ஒரு மாடு மிரண்டு வந்தா ஓடி ஒதுங்கவும் முடியாது போலிருக்கேடா. டீ.வி. விளம்பரத்துல சிநேகா, ஸ்ரேயா எல்லாம் கடைக்குள்ளே 'டான்ஸ்' ஆடறப்ப, கடையே காலியா இருக்கும். இப்ப என்னடான்னா 'ரஜினி' படத்துக்கு முதல் ஷோவுக்கு வந்த மாதிரி மூச்சு முட்டுதேடா. ஒரு 'ஷர்ட்' எடுக்கிறதுக்குள்ளே போட்டிருக்கிற 'டிரஸ்' வியர்வையில நனைஞ்சுடுதுடா. இங்கே நடக்கற ஒரு நாள் கலெக்ஷனை வெச்சு உலக வங்கிக் கடனை அடைச்சுடலாம் போலிருக்கேடா.



## குசும்புராஜ்

கவிஞர் வைரமுத்து :

திரும்பிய பக்கமெல்லாம்
மனிதத் தலைகள் விரைகின்றன.
தெருவுக்குத் தெரு கடைகள்
தலைகளுக்கு வலை விரிக்கின்றன.
பிரம்மனின் ப்ரொடக்ஷன்
இங்கே நன்கு தெரிகிறது.
சிவனின் கோயிலும்
பத்தில் ஒன்றாய்க் கடக்கிறது.
மனிதனின் மனம் இன்னதென
இங்கு நன்கு தெளிகிறது.
கடைகள் கண் சிமிட்டும் இடத்தில்
கடவுளும் பின்னேயெனப் புரிகிறது!

# தி.நகரில் வி.ஐ.பி.க்கள்!



விட்டார்கள். இதனால் மக்கள் அவதிப்படுகிறார்கள். இதற்குப் பொறுப்பேற்று, கருணாநிதியின் 'மைனாரிட்டி' அரசு பதவி விலக வேண்டும். சற்று முன்பு எனக்குக் கிடைத்த செய்தி. கருணாநிதியும், ஸ்டாலினும் வீட்டிலே பேசிக்கொண்டார்கள். 'தி.நகர்ல நாளுக்கு நாள் போக்குவரத்து நெரிசல் அதிகமாகிக்கொண்டே செல்கிறதே... என்ன செய்யலாம்?' என்று ஸ்டாலின் கேட்டாராம். அதற்கு கருணாநிதி சற்றும் பொறுப்பில்லாமல் 'நடப்பதால்தானே பிரச்னை. எல்லோரையும் 'ஸ்பைடர்மேன்' போல பறக்கச் சொல்வோம். பறக்கும் பஸ், பறக்கும் கார்களைப் பயன்படுத்தச் சொல்வோம்' என்று கிண்டலுடன் சொன்னாராம். அதைக் கேட்டு ஸ்டாலின் விழுந்து விழுந்து சிரித்தாராம். மக்களின் அவதி இவர்களுக்குச் சிரிப்பாக இருக்கிறது. அது மட்டுமல்ல, நான் தி.நகருக்கு ஷாப்பிங் செய்ய வந்தால் எந்தக் கடையிலும் துணியைக் கொடுக்கக்கூடாது என்று மிரட்டப்பட்டிருக்கிறார்கள். தி.நகர் பிரச்னை மாறுகிறதோ இல்லையோ, ஆட்சி நிச்சயம் மாறும். அப்போது பார்த்துக் கொள்கிறேன். ●



ஜெயலலிதா :

தீபாவளி சமயத்தில் இங்கே எவ்வளவு கூட்டம் வருமென்பது தெரிந்தும், சற்றும் பொறுப்பில்லாமல் பாலம் கட்டுகிறோம், சாலையை விரிவுபடுத்துகிறோமெனக் கூறி, இடத்தை அடைத்து




# நானும் அறை வாங்கிய நடிகைதான்!

**ப**தினேழு வருடங்களுக்குப் பிறகு தமிழ் சினிமாவில் இன்னொரு அஞ்சலி. 'கற்றது தமிழ்' படத்தில் அரிதாரம் பூசாமல் புரட்சிகர கருத்துகள், ஜீவாவின் நடிப்பு, மயக்கமூட்டும் இயக்கம் மற்றும் இசை இவற்றுக்கு நடுவே தன் நடிப்பையும் ரசிகர்கள் மனத்தில் பதியச் செய்திருக்கிறார் இவர்.

''சினிமாவுல நடிக்கணும்ங்கிறது என் ஆசை இல்லை. எங்கம்மாவோட நீண்ட நாள் கனவு. நீ கண்டிப்பா ஒருநாள் நடிகையாகணும்னு சின்ன வயசிலிருந்தே அந்த ஆசையை எனக்கு ஊட்டிட்டு இருந்தாங்க. இதுவே எனக்கும் ஒருவித மயக்கத்தைக் கொடுத்துச்சு. நல்ல வேளை, எல்லாமே நல்லபடியா, நினைச்ச மாதிரியே நடந்திருக்கு'' என்கிற அஞ்சலி, இதற்கு முன்னால் இரண்டு தெலுங்குப் படங்களில் நடித்திருக்கிறார்.

''ஆரம்பத்துல எனக்கு எல்லாமே கஷ்டமா இருந்துச்சு. ஒரு நல்ல தமிழ் படத்துல நடிக்கணும்னு நீண்ட நாளா காத்துட்டிருந்தேன். அது சரியா அமைஞ்சும் என்கிட்ட நிறைய திறமைகளை இயக்குநர் எதிர்பார்த்தார். அவரே ஓர் அற்புதமான நடிகர். அவர் சொல்லிக் கொடுத்ததுல நான் பாதிதான் நடிச்சிருக்கேன். மேக்கப் இல்லாம நடிக்கணும்னு சொன்னப்போ எனக்கு அது ரொம்ப சௌகர்யமா இருந்துச்சு. வழக்கமா மத்த நடிகைகள் மாதிரி அலங்காரங்கள் செய்து நடிச்சிருந்தா இவ்வளவு கவனம் கிடைச்சிருக்காது. இந்தப் படத்துக்காகச் சில அடிகளும் வாங்கியிருக்கேன். ஒரு சீன்ல சைக்கிள்ல இருந்து விழுந்து கால்ல செம அடி. என்னை அறையற ஒரு சீன்ல நிஜமாவே 'பளார்' சத்தம் கேட்டுச்சு'' என்று சிரிக்கிறார்.

**அ**ஞ்சலிக்குத் தமிழ் சினிமா அறிமுகம் மட்டுமல்ல, தமிழ் அறிவும் இந்தப் படத்திலிருந்தே ஆரம்பித்திருக்கிறது. ''நான் சில வருஷங்கள் முன்னாடிதான் சென்னைக்கு வந்தேன். அதனால தமிழை அவ்வளவு சுலபமா



பேசிட மாட்டேன். படத்துல ஜீவா நிறைய பாரதியார் கவிதைகளை வாசிப்பார். எனக்கு ரொம்ப பிரமிப்பா இருக்கும். அப்புறம்தான் தமிழ் பத்தி ஒவ்வொண்ணா தெரிஞ்சுக்கிட்டேன். நேஷனல் அவார்ட் வாங்கணும்னா தமிழ்ல பேசினாத்தான் முடியும்னு சொல்லியே என்னை சொந்தக் குரல்ல பேச வெச்சுட்டாங்க'' என்கிறார்.

அடுத்ததாக சுந்தர் சி.யுடன் 'ஆயுதம் செய்வோம்' என்கிற படத்தில் நடிக்கிறார் அஞ்சலி. ''கற்றது தமிழ் பண்ண பிறகு சாதாரண படத்துல நடிச்சா அது ரொம்பத் தப்பு. அதேசமயம் விதவிதமான கேரக்டர்ல நடிக்கணும். என்கிட்டயிருந்து நிறைய பங்களிப்பை எதிர்பார்க்கணும். கிளாமரா நடிக்கறது தப்பில்லைங்கறது என் கருத்து. அதேசமயம் பெரிய ஹீரோக்களோட நடிக்கும்போது அவங்களுக்குச் சமமான கேரக்டர்கள் கிடைக்காமப் போகலாம். ஓ.கே. பெரிய ஹீரோக்களுக்காக சில விஷயங்களை விட்டுக்கொடுக்கலாம். மற்றபடி சின்னப் படங்கள்னா கண்டிப்பா சொல்லிக்கிற மாதிரி என் கேரக்டர் இருக்கணும்.''

புகழ் என்பது இவரது பெரிய விருப்பமாக இருக்கிறது. '' 'கற்றது தமிழ்' ஆடியோ ரிலீஸ் ஆனதிலிருந்தே என்னை எல்லோரும் பாராட்ட ஆரம்பிச்சுட்டாங்க. ஒரு நல்ல படத்துல நடிச்சா அதோட மதிப்பே தனி இல்லையா! முதல்நாள் நைட் ஷோ பார்க்கலாம்னு போனேன். அதுக்கு முன்னாடி தமிழ்நாட்டுல நான் ஒரு சாதாரணப் பிரஜை. ஆனா இண்டர்வெல்ல எல்லோரும் என்னைப் பார்த்துட்டு 'ஆனந்தி ஆனந்தி'னு சூழ்ந்துக் கிட்டாங்க. உடனே மீதிப் படம் பார்க்காம ஓடி வந்துட்டேன். சினிமாங்கறது அட்டகாசமான தொழில். இங்கேதான் நிறையப் பணமும் புகழும் கிடைக்கும். கிசுகிசு எழுதினாகூட நீங்க அதிகம் கவனிக்கப் படுறீங்கன்னு அர்த்தம். என் நடிப்பை எல்லோரும் பார்க்கணும், புகழணும். அதான் என் ஆசை.''

**– சநகன்**

நீண்ட நாளுக்குப் பிறகு வந்திருக்குற அருண் விஜயோட படம். மரணத் தருவாயில சந்திக்குற ஓர் ஆணும் பெண்ணும் வாழத் துடிக்கிறாங்க; போராடுறாங்க. மறுபடி மரணம் அவங்களை அழைக்க, வாழ முடிஞ்சுதா, வாழ விட்டுதா இந்தச் சமூகங்கறதை நீட்டி முழக்கிச் சொல்லியிருக்காங்க.

அருண் விஜய் ரொம்பவே எதிர்பார்த்த படம். அவரளவுக்கு சிறப்பா செஞ்சிருக்கார். மரண பயம் கண்கள்ல தெரியுது. வாழத் துடிக்குற வேட்கையையும் அழகாவே பிரதிபலிக்குறார். புதுமுகம் வந்தனாவுக்கு நடிக்க நிறைய ஸ்கோப்புள்ள கதை. ஓரளவுக்குப் பயன்படுத்தி இருக்கார். இன்னொரு நாயகியான அர்பிதாவும் தேறிடுறார். கௌரவ வேடத்துல வர்ற அர்ஜுன், க்ளைமேக்ஸ் பரபரப்புக்கு உத்தரவாதம் தர்றார் (இவர்தான் தயாரிப்பாளர்). வடிவேலு காமெடி கதிகலங்க வைக்குது. பீச் குதிரை ஏறி அடி வாங்கறது தீபாவளி போனஸ். ஜனகராஜ், வாசு விக்ரம், வெண்ணிற ஆடை மூர்த்தி, கலைராணின்னு ஒரு கூட்டமே நடிச்சிருந்தாலும் சோடை போகல. இமானோட இசையில் பாடல்கள் இனிமை. 'கண்ணதாசன்' பாடலைக் காது குளிரக் கேக்கலாம். என்.ரவியோட ஒளிப்பதிவு உள்ளத்துக்கு இதம் சேர்க்குது. தளபதி தினேஷோட சண்டைக் காட்சிங்க பவர்ஃபுல். வசனம் ஜி.கே.கோபிநாத் - அழகான ஆப்பிள். இயக்கம் சக்தி பரமேஷ். தெலுங்குல வந்த சூப்பர் ஹிட் படத்தைத் தமிழ்ல பண்ணியிருக்கார். கதாபாத்திரங்கள்கிட்ட சரியா வேலை வாங்கத் தெரிஞ்சவர், திரைக்கதைல கோட்டை விட்டுட்டார். வலுவில்லாத, அடுத்தடுத்த சீன் என்னன்னு முன்னாடியே யூகிக்க முடியற காட்சியமைப்புகள், சுவாரஸ்யமில்லாத சம்பவங்கள்னு ரொம்பவே போர் அடிக்க வச்சுட்டார். புதுசா எதுவும் இல்ல. அரைச்ச மாவையே அரைச்சிருக்கார். நல்ல கதை, நல்ல கலைஞர்கள் கிடைச்சும் சரியானபடி மெனக்கெடாததால ரசிகர்களோட தவம் பாதியிலேயே கலைஞ்சிடுது.

– சித்ரா

# தவம்







# ஒரே ஒரு தீப்பெட்டி!

• ஜெயபாஸ்கரன்

கரும்பு வெட்டுவதை
வேலையாக அல்லாமல்
விழாவாகவே நடத்துவார்கள்
எங்கள் ஊரில்

முன்னிரவு நேரங்களில்
வெட்டுக் கத்திகளுக்கு
சாணை பிடிக்கும் ஓசையிலேயே
நாவில் நீர் ஊறும்
எனக்கும் தட்சிணாமூர்த்திக்கும்

மார்கழி மாதக் கடுங்குளிரின்
அதிகாலைகளில்
சனி மூலையில் ஏற்றிய சூடம்
சுடர்ந்து முடிவதற்குள்
காத்தவராய சாமியின்
கனத்த கைத்தடிகளாக
வரப்பின் மீது வந்து விழும்
கரும்புக் கிடைகள்

ஆறடி அகலமும்
ஏழடி உயரமுமாக அடுக்கப்பட்டு
கனத்த மதில் சுவரைப்போல
மடுவங்கரை வரைக்கும் நீண்டிருக்கும்
கரும்புக் கட்டுகளின் ஓரம்,
மாமன்னனைப் போல
நெஞ்சு நிமிர்த்தி நடந்து வருவார்
சண்முகம் சித்தப்பா

வறியவர்களை வைதபடியும்
வலியவர்களை வணங்கியபடியும்
தரம் பார்த்துக் கரும்பு உருவி
உண்ணக் கொடுப்பார் தாத்தா

தண்ணீர், எருவுடன் தனது
வியர்வையையும் கலந்து பாய்ச்சி
பச்சைப் பசேலென வளர்த்தது
லாரியில் அடுக்கப்பட்டு
படாளம் சர்க்கரை ஆலைக்கு
பயணம் போகையில்
ஏதோ ஒருவித மௌனத்தில் உறைவாள்
என்னையும் வளர்த்த
என் பாக்கியம் பாட்டி

காலம் உருண்டு
காட்சிகள் மாறிப் போனது

விளைந்த கரும்புக்கு
விலை அல்ல...
வெட்டு ஆணைகூட கிடைப்பதில்லை

வேலையாட்களோடும்
வெட்டுக் கத்திகளோடும்
கரும்புத் தோட்டம் நோக்கி
முன்னொரு காலத்தில்
படை நடத்திச் சென்ற என் அப்பா
இப்போது தன்னந்தனியாக
போய்க் கொண்டிருக்கிறார்
ஒரே ஒரு தீப்பெட்டியோடு!





"உங்க மனைவியை நீங்க எதிர்த்துப் பேசினா என்ன நடக்கும்?"

"நடக்காதுங்க. எல்லாம் பறக்கும்!"



"ஸ்கூலுக்கு தினமும் அழுதுக்கிட்டே போற உங்க பையன், இன்னைக்கு சந்தோஷமா கிளம்பிப் போறானே..?"

"அவன் போறது தங்கர்பச்சானோட பள்ளிக்கூடத்துக்குங்க!"

- சீர்காழி வி.ரேவதி

"தலைவர் பாயில படுக்கிறாரே?"

"எந்திரிச்ச உடனே அவருக்கு எதையாவது சுருட்டணும்..."



# மனைவிக்குக் கோபம் வந்தா...!



"மன்னா, இவன் மகாராணியை கண்டபடி திட்டிவிட்டான்."

"யார் அவன்...! நாட்டிலே எனக்கு ஆதரவாகக்கூட ஒருத்தன் இருக்கிறானா!"



"நடக்கவே முடியல டாக்டர்!"

"துணைக்கு உங்க மனைவியை அழைச்சுட்டு வரவேண்டியதுதானே..."

"கால் வலியோட வந்ததே பெரிய விஷயம். இதுல தலைவலி வேறயா!"



"அழகில் அர்ஜுனனே, பலத்தில் பீமனே, தந்திரத்தில் சாணக்கியரே, வையம் போற்றும் வீராதி வீரரே..."

"இப்படி எல்லாம் உசுப்பேற்றினால் நான் போர்க்களத்துக்கு வந்துவிடுவேனா... நடக்காது தளபதி!"



"என் மனைவி கோவிச்சுக்கிட்டு அவ அம்மா வீட்டுக்குப் போயிட்டா..."

"இது பரவாயில்லீங்க... என் மனைவிக்குக் கோபம் வந்தா, அவ அம்மாவை இங்கே வரவழைச்சிடுவா!"

– சிக்ஸ்முகம்

# கனவின் நுழைவாயில்

"எனது தந்தை மணியம் 1956-ஆம் ஆண்டு 'கல்கி' நிறுவனத்திலிருந்து வெளியே வந்தார். அதற்குக் காரணம் 'பார்த்திபன் கனவு' நாவல், திரைப்படமாக எடுப்பதென முடிவாகியிருந்தது. ஜூபிடர் பிக்சர்ஸ் தயாரிப்பு. அதற்கு முன்புவரை அவருக்குத் திரைப்படங்களில் பணி யாற்றிய அனுபவம் கிடையாது. எனினும் தயாரிப்பாளர் மிகுந்த நம்பிக்கையுடன் 'ஆர்ட் டைரக்ஷன்' பொறுப்பை என் தந் தையிடம் ஒப்படைத்தார்.

அப்போது எனக்கு எட்டு வயதி ருக்கும். கம்பெனி கார் தினமும் வந்து, அப்பாவை அழைத்துச் செல்லும். லொகேஷனுக்காக அப்பா அடிக்கடி மாமல்லபுரத்துக்குச் செல்வார். என் னையும் அம்மாவையும் சில சமயம் அழைத்துச் செல்வார். நாங்கள் விடுதியில் தங்கி இருப்போம். சிற்பங்களைப் பார்த்துக் கொண்டி ருப்போம். அவர் எந்தக் காட்சியை எங்கு அமைக்க வேண்டும் என்ற பணியில் ஈடுபட்டிருப்பார். நீண்ட தூரம் நடந்து சென்று வெவ்வேறு இடங்களைத் தேர்ந்தெடுப்பார். இரண்டு, மூன்று முறை சென்று வந்ததும் எனக்குச் சலித்துவிட்டது. 'என்ன இது? பார்த்த இடத்தையே திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டிருக்கிறாரே?' என்று நினைப்பேன்.

ஆனால், அப்பாவுக்குச் சலிக்கவே இல்லை. திரைப்படத்தின் ஒவ்வொரு காட்சியிலும் அமரர் கல்கியின் முத்திரை தெரிய வேண்டுமென நினைத்தார். பொதுவாகக் காட்சியமைப்புக்கு 'ஸ்கெட்ச்' தான் திரைப்படங்களில் போடுவது வழக்கம். ஆனால், பார்த்திபன் கனவு திரைப்படத்தின் சில காட்சியமைப்பு களுக்கு அப்பா 'பெயிண்டிங்' காகவே வரைந்து விடுவார்.

இன்னும் சொல்லப்



★'பார்த்திபன் கனவு' திரைப்படக் காட்சிகளும் மணியம் வரைந்த ஓவியமும்...

# குந்தவியின்

போனால், 'பார்த்திபன் கனவு' திரைப் படத்தில் மற்ற செலவுகளைவிட, 'கலை இயக்கம்' சம்பந்தமான செலவே அதிகமானது. இந்த 'இடத்துக்கு இதுதான் சரியாக இருக்கும். இந்த விஷயம் கண்டிப்பாகத் தேவை' என்று அப்பா உறுதியுடன் இருப்பார். தயாரிப்பாளரும் அதனை மகிழ்ச்சியுடன் செய்வார். திரைப்படத்தில் விக்கிரமனாக 'ஜெமினி கணேசன்', குந்தவியாக 'வைஜெயந்திமாலா', நரசிம்மச் சக்கரவர்த்தியாக 'ரங்காராவ்' நடித்திருந்தார்கள்.

குந்தவியின் அலங்காரம் எப்படி இருக்க வேண்டுமென்பதற்கு தந்தை வரைந்த 'ஸ்கெட்ச்'தான் இங்கே நீங்கள் பார்ப்பது. தலையின் கொண்டை முதல் பாதம் வரை நுணுக்கமாக வரைந்து, அதற்கேற்ப வைஜெயந்திமாலா அவர்களுக்கு ஆடை, அணிகலன்களைத் தேர்ந்தெடுப்பார். அதே போல் விக்கிரமன் குதிரையில் வருகிற காட்சி, சித்திர மண்டபம் என ஒவ்வொரு காட்சியையும் சிரத்தையுடன் உருவாக்கினார். பல காட்சிகளுக்கான அரங்கு அமைப்புகளை மினியேச்சராக உருவாக்கிப் படம் பிடித்தனர்.

கதையில் 'சிவனடியார்' கதாபாத்திரம் யார் என்பது இறுதி வரை வாசகர்களுக்கு மர்மமாக இருக்கும். ஆனால், திரைப் படத்தில் அது தொடக்கத்திலேயே தெரிந்துவிடுவது ஒரு குறையாக அமைந்துவிட்டது.

இன்றைய திரைப்படத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி இன்னும் சிறப்பாகச் செயல்பட முடியும். அமரர் கல்கியின் அழியா காவியங்கள் திரைப்படங்களானால், அது தமிழனின் பண்பாடு, கலை, வீரத்தை உலகுக்கு எடுத்துச் சொல்லும் ஆவணமாக அமையும்.

புதிய முயற்சிகளைச் செய்யும் இளைஞர்கள் பலர் இன்று சினிமாவில் உலாவந்து கொண்டிருக்கிறார்கள். அவ்வப்போது வித்தியாசமான படங்களைக் கொடுத்து, நம்பிக்கை ஏற்படுத்துகிறார்கள். அவர்களுடன் அனுபவமிக்க திரைக் கலைஞர்களும் சேர்ந்தால், சரித்திரம் படைக்க முடியும். பொன்னியின் செல்வனும், சிவகாமியின் சபதமும் வருங்காலத்தில் வெண்திரையில் உலாவரும் என்ற நம்பிக்கை இருக்கிறது.''

தொகுப்பு: ஆரணி யுவராஜ்

பார்த்திபன் கனவு - 2 போட்டி முடிவு அடுத்த இதழில்...

**மணியம் செல்வன்**





# பார்த்திபன் கனவு

## 18. பொன்னனின் அவமானம்

சென்ற மூன்று தினங்களாக பொன்னன் குடிசைக்குள்ளே இடியும் மழையும் புயலும் பூகம்பமுமாக இருந்தது.

''நான் செய்தது தப்பு என்றுதான் ஆயிரந் தடவை சொல்லிவிட்டேனே! மறுபடியம் மறுபடியும் என் மானத்தை வாங்குகிறாயே!'' என்றான் பொன்னன்.

''தப்பு, தப்பு, தப்பு என்று இப்போது அடித்துக்கொள்கிறாயே, என்ன பிரயோஜனம்? இந்தப் புத்தி அப்போது எங்கே போச்சு?'' என்று வள்ளி கேட்டாள்.

''இப்போது என்ன குடி முழுகிப் போய் விட்டதென்று ஓடஓட விரட்டுகிறாய், வள்ளி! அந்தச் சக்கரவர்த்தி எங்கே போய் விட்டார்! என் வேல்தான் எங்கே போச்சு?''

''வேல் வேறயா, வேல்? கெட்ட கேட்டுக்குப் பட்டுக் குஞ்சந்தான்! ஓடம் தள்ளுவதற்கும் கும்பிடுவதற்குந்தான் கடவுள் உனக்குக் கையைக் கொடுத்திருக்கிறார்! கும்பிடுகிற கையினால் எங்கேயாவது வேலைப் பிடிக்க முடியுமா?''

இரண்டு உடலும் ஓர் உயிருமாயிருந்த தம்பதிகளுக்குள் இப்படிப்பட்ட ஓயாத வாய்ச் சண்டை நடப்பதற்குக் காரணமாயிருந்த சம்பவம் இதுதான்:-

இரண்டு நாளைக்கு முன் இந்தக் காவேரிக்கரைச் சாலை வழியாக நரசிம்மச் சக்கரவர்த்தியும் குந்தவி தேவியும் அவர்களுடைய பரிவாரங்களும் உறையூரை நோக்கிப் போய்க்கொண்டிருந்தபோது, தோணித் துறைக்கு அருகில் சக்கரவர்த்தி சிறிது நின்றார். தோணித் துறையையும், காவேரியின் மத்தியிலிருந்த தீவையும், அந்தத் தீவில் பச்சை மரங்களுக்கிடையே காணப்பட்ட வசந்த மாளிகையின் பொற் கலசத்தையும் குந்தவிக்குச் சுட்டிக்காட்டி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார்.

அச்சமயம் குடிசையின் வாசலில் நின்று கொண்டிருந்த பொன்னன், வள்ளி இவர்கள் மேல் சக்கரவர்த்தியின் பார்வை விழுந்தது. பொன்னனை அருகில் வரும்படி அவர் சமிக்ஞை செய்யவும், பொன்னன் ஓடோடியும் சென்று, கைகூப்பித் தண்டம் சமர்ப்பித்து, பயபக்தியுடன் கையைக் கட்டிக்கொண்டு அவர் முன்னால் நின்றான். சக்கரவர்த்தியைப் பழிக்குப்பழி வாங்கப் போவதாகவும், அவருடைய மார்பில் தன் வேலைச் செலுத்தப் போவதாகவும் அவன் சொல்லிக்கொண்டிருந்ததெல்லாம் அச்சமயம் அடியோடு மறந்து போய்விட்டது. சக்கரவர்த்தியின் கம்பீரத் தோற்றமும் அவருடைய முகத்தில் குடி கொண்டிருந்த தேஜஸும் அவனை அவ்விதம் வசீகரித்துப் பணியச் செய்தன.

''இந்தத் தோணித் துறையில் படகு ஓட்டுகின்றவன் நீதானே, அப்பா!'' என்று சக்கரவர்த்தி கேட்கவும், பொன்னனுக்குத் தலைகால் தெரியாமற் போய்விட்டது.

''ஆமாம், மகா... சக்ர... பிரபு!'' என்று

**சக்கரவர்த்திக்குப் பணிந்து மறுமொழி சொன்ன காரணத்தினால் விக்கிரம மகாராஜாவுக்கு பொன்னன் துரோகம் செய்துவிட்டதாக வள்ளி குற்றம் சாட்டினாள்!**

# கனவு

குமுறினான்.

''அதோ தெரிகிறதே, அந்த வசந்த மாளிகையில்தானே அருள்மொழி ராணி இருக்கிறார்!''

''ஆமாம்.''

''இதோ பார்! நமது குழந்தை குந்தவி தேவி, ராணியைப் பார்ப்பதற்காகச் சீக்கிரத்தில் இங்கே வரக்கூடும். ஜாக்கிரதையாக ஓடம் செலுத்திக்கொண்டு போய் அந்தக் கரையில் விட வேண்டும், தெரியுமா!''

''புத்தி, சுவாமி!'' என்றான் பொன்னன்.

பிறகு சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும் உறையூரை நோக்கிச் சென்றார்கள்.

இதையெல்லாம் வள்ளி குடிசை வாசலில் நின்றபடி அரைகுறையாகக் கேட்டுக்கொண்டிருந்தாள். பொன்னன் திரும்பி வந்தபோது, வள்ளியின் முகத்தில் 'எள்ளும் கொள்ளும்' வெடித்தது. முழு விவரமும் அவனிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட பின்னர், வள்ளி பலமாய்ச் சண்டை பிடிக்க ஆரம்பித்தாள். சக்கரவர்த்திக்குப் பணிந்து மறுமொழி சொன்ன காரணத்தினால் விக்கிரம மகாராஜாவுக்கு பொன்னன் துரோகம் செய்துவிட்டதாக வள்ளி குற்றம் சாட்டினாள். ''உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் துரோகி!'' என்று நிந்தித்தாள். அப்போது அவர்களுக்குள் ஏற்பட்ட விவகாரம் மூன்று தினங்களாக இடைவிடாமல் நடந்துகொண்டிருந்தது.

**வ**ள்ளியின் சொல்லம்புகளைப் பொறுக்க முடியாதவனாய், அன்று மத்தியானம் உச்சி வேளையில் பொன்னன் நதிக்கரையோரம் சென்றான். அங்கே நீரோட்டத்தின் மீது தழைந்து கவிந்திருந்த ஒரு புங்க மரத்தினடியில் அதன் வேரின் மேல் உட்கார்ந்து, தனக்கு நேர்ந்த அவமானத்தை எப்படி துடைத்துக் கொள்வது, வள்ளியிடம் மறுபடியும் எப்படி நல்ல பெயர் வாங்குவது என்று சிந்தித்துக் கொண்டிருந்தான். அப்போது கார்த்திகை மாதக் கடைசி, ஒரு மாதம் சேர்ந்தாற்போல் அடைமழை பெய்து, விட்டிருந்தது. கழனிகளில் நீர் நிறைந்து தளும்பிக்கொண்டிருந்தது. பச்சை மரங்களின் இலைகள், புழுதி தூசியெல்லாம் கழுவப்பட்டு நல்ல மரகத வர்ணத்துடன் பிரகாசித்தன. குளுகுளுவென்று குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது.

இப்படி வெளி உலகமெல்லாம் குளிர்ந்திருந்ததாயினும், பொன்னனுடைய உள்ளம் மட்டும் கொதித்துக் கொண்டிருந்தது. பத்து வருஷத்துக்கு முன்னால் இந்தக் கார்த்திகை மாதம் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்! பார்த்திப மகாராஜாவும் ராணியும் இளவரசரும் இங்கே அடிக்கடி வருவதும் போவதுமாயிருப்பார்கள். அரண்மனை படகுக்கு அடிக்கடி வேலை ஏற்படும். தோணித்துறை அப்போது எவ்வளவு கலகலப்பாயிருந்தது! குதிரைகளும், யானைகளும், தந்தப் பல்லக்குகளும் இந்த மாந்தோப்பில் வந்து காத்துக்கொண்டு கிடக்குமே! அந்தக் காலம் போய்விட்டது. இப்போது ஈ, காக்கை இங்கே வருவது கிடையாது. இந்தத் தோணித் துறைக்கு வந்த கேடுதான் என்ன? பார்த்திப மகாராஜா போர்க்களத்தில் இறந்து போனார். இளவரசர் எங்கேயோ கண்காணாத தீவில் தவித்துக் கொண்டிருக்கிறார். அருள்மொழி ராணியோ ஓயாமல் கண்ணீரும் கம்பலையுமாயிருக்கிறார். வசந்த மாளிகைக்குப் போவார் இல்லை; ஓடத்துக்கும் அதிகம் வேலை இல்லை.

அந்தச் சண்டாளன் மாரப்ப பூபதி மட்டும் துரோகம் செய்யாமலிருந்திருந்தால்... இப்போது விக்கிரம மகாராஜா சோழ நாட்டின் சிம்மாசனத்தில் வீற்றிருப்

**அமரர் கல்கி**

பார் அல்லவா? பல்லவச் சக்கரவர்த்தி இங்கே ஏன் வரப் போகிறார்? வள்ளியிடம் தான் ஏச்சுக் கேட்கும்படியாக ஏன் நேரிட்டிருக்கப் போகிறது? இப்படி பொன்னன் யோசிக்கும்போது, குதிரை வரும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சாலை ஓரத்தில் பொன்னனுடைய குடிசைக் கருகில் மாரப்ப பூபதி குதிரை மேலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான்.

## 19. மாரப்பனின் மனோரதம்

**மா**ரப்ப பூபதி பொன்னனின் குடிசைக் கதவைத் திறந்தபோது, வள்ளி பின்வருமாறு சொல்லிக்கொண்டிருந்தாள்:-

"மானம் போன பிறகு உயிரை வைத்துக்கொண்டு இருந்து என்ன பிரயோசனம்? நம்ம தேசத்துக்கும் நம்ம மகாராஜாவுக்கும் துரோகம் செய்துவிட்டு, அப்புறம் பிராணனை வைத்துக்கொண்டு இருக்கிறதாயிருந்தால், உனக்கும் அந்தக் கேடுகெட்ட மாரப்பனுக்கும் என்ன வித்தியாசம்?''

இதை மாரப்பன் கேட்டதும் அவனுடைய முகம் கோபத்தினால் சிவந்தது. வாசற்படியிலேயே சற்று நேரம் அசையாமல் நின்றான். பிறகு என்ன தோன்றிற்றோ என்னவோ, அவனுடைய முகத்தில் ஒருவிதமான மலர்ச்சி உண்டாயிற்று. புன்னகையுடன், "என்ன வள்ளி!



என் தலையையும் சேர்த்து உருட்டுகிறாய்? என்ன சமாசாரம்? என்னோடு பொன்னனையும் சேர்க்கும்படியாக அவன் அப்படி என்ன பாதகம் செய்துவிட்டான்!'' என்றான்.

அடுப்பு வேலையைப் பார்த்தபடி பொன்னன்தான் வருகிறான் என்று நினைத்துக்கொண்டு, தலை நிமிராமல் முதலில் பேசிய வள்ளி, வேற்றுக் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுப் பார்த்தாள். மாரப்பன் என்று அறிந்ததும், அவளுக்குக் கொஞ்சம் திகைப்பாய்த்தானிருந்தது. ஆனாலும், சீக்கிரத்தில் சமாளித்துக்கொண்டு, ''உங்கள் தலையை உருட்டுவதற்கு என்னால் முடியுமா, ஐயா? அதற்கு எந்த உண்மையான வீரம் படைத்த ஆண்பிள்ளை பிறந்திருக்கிறானோ?'' என்றாள்.

இதில் பிற்பகுதியை மெல்லிய குரலில் சொன்னபடியால் மாரப்பன் காதில் நன்றாக விழவில்லை.

''என்ன சொன்னாய், வள்ளி?'' என்றான்.

இதற்குள் பொன்னன் வெளியிலிருந்து வரவே, மாரப்பன் அவனைப் பார்த்து, ''பொன்னா! உன்னோடு ஒரு சமாசாரம் பேச வேண்டும், வா'' என்று கூறி அவனை வெளியில் அழைத்துப் போனான்.

இருவரும் நதிக் கரைக்குச் சென்று மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.



''பொன்னா! நீ எனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்திருக்கிறாய். அதற்காக என்றைக்காவது ஒரு நாள் நான் உனக்கு நன்றி செலுத்தியாக வேண்டும்'' என்றான் மாரப்பன்.

''நானா, ஐயா? உங்களுக்கா? அப்படி யொன்றும் செய்ததாகத் தெரியவில்லையே?''

''உனக்குத் தெரியாமலே செய்திருக்கிறாய், பொன்னா!''

''ஐயையோ! அப்படியானால், அதை வள்ளியிடம் மட்டும் சொல்லிவிடாதீர்கள்! அவள் என்னை இலேசில் விடமாட்டாள்!'' என்றான் பொன்னன்.

மாரப்பன் சிரித்துக்கொண்டே, ''அது தான் பொன்னா! அதுதான்! வள்ளியை நீ கல்யாணம் செய்துகொண்டாயே, அதுதான் நீ எனக்குச் செய்த பெரிய உபகாரம். ஒரு காலத்தில் அவளை நான் கல்யாணம் செய் கொள்ளலாமென்ற சபலம் இருந்தது. அப்படி நடந்திருந்தால் என்னை என்ன பாடு படுத்தியிருப்பாளோ?''

''ஆமாம் எஜமான், ஆமாம்! தங்களுடைய சாதுக் குணத்துக்கும் வள்ளியின் சண்டைக் குணத்துக்கும் ஒத்துக்கொள்ளாது தான். சண்டை என்று கேட்டாலே தங்களுக்குச் சுரம் வந்துவிடும் என்பதுதான் உலக மெல்லாம் அறிந்த விஷயமாயிற்றே!'' என்றான் பொன்னன்.

''என்ன சொன்னாய்?'' என்று மாரப்பன் கத்தியை உருவினான்.

''ஓகோ! கத்திகூடக் கொண்டு வந்திருக்கிறீர்களா? நிஜக் கத்திதானே? கொஞ்சம் இருங்கள், வள்ளியைக் கூப்பிடுகிறேன். உங்கள் உறையில் உள்ள கத்தி நிஜக் கத்தியல்ல - மரக் கத்தி என்று அவள் ரொம்ப நாளாய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறாள்!'' என்று கூறிவிட்டு பொன்னன் எழுந்திருந்தான்.

மாரப்பன் கத்தியைப் பக்கத்தில் தரையில் வைத்துவிட்டு, ''வேண்டாம், பொன்னா! உட்கார். புருஷர்களின் காரியத்தில் பெண் பிள்ளைகளைக் கூப்பிடக் கூடாது. அவர்கள் வந்தால் விபரீதந்தான். பார்! விக்கிரமனைச் சோழ தேசத்துக்கு ராஜாவாக்க நாம் பெரு முயற்சி செய்தோமே... அது பலித்ததா? நமது ஆலோசனைகளில் அருள்மொழி ராணியைச் சேர்த்துக்கொண்டதனால்தானே, காரியம் கெட்டுப் போயிற்று?'' என்றான்.

''அப்படியா? மகாராணி என்ன செய்தார்கள், காரியத்தைக் கெடுப்பதற்கு? அவர் தான் இங்கே இளவரசரையும் கிளப்பி விட்டுவிட்டு, அங்கே அச்சுதவர்மரிடமும் போய்ச் சொல்லிக் கொடுத்தாரா? பிள்ளை மேல் அவருக்கு என்ன அவ்வளவு விரோதம்?''

''இல்லை, பொன்னா! ராணி யாரோ ஒரு சிவனடியாரை நம்பி, அவரிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டாள். அந்த வேஷதாரியை நம்ப வேண்டாமென்று நான் எவ்வளவோ சொன்னேன். கேட்டால் தானே! உண்மையில் அந்தக் கபட சந்நியாசி பல்லவச் சக்கரவர்த்தியின் ஒற்றன்! எல்லாவற்றையும் போய்ச் சொல்லிவிட்டான்!''

இதைக் கேட்டதும், பொன்னனுக்கு ஏற்கனவே அந்த சிவனடியார் மேல் ஏற்பட்டிருந்த சந்தேகம் கொஞ்சம் பலப்பட்டது. 'ஒரு வேளை அவருடைய வேலையாகவே இருந்தாலும் இருக்கலாம். நாம் அனாவசியமாய் மாரப்ப பூபதியைச் சந்தேகித்தோமே?' என்று சிறிது வெட்கமடைந்தான்.

''சிவனடியாராயிருந்தாலும் சரி, என்றைக்காவது ஒரு நாள் உண்மை வெளி

''வள்ளியை நீ கல்யாணம் செய்து கொண்டாயே, அதுதான் நீ எனக்குச் செய்த பெரிய உபகாரம்'' என்றான் மாரப்ப பூபதி.

யாகப் போகிறது. அப்போது, துரோகம் செய்தவனை...'' என்று பொன்னன் பல்லை நறநறவென்று கடித்த வண்ணம், மாரப்பனுக்குப் பக்கத்தில் தரையில் கிடந்த கத்தியைச் சட்டென்று எடுத்து ஒரு சுழற்றுச் சுழற்றி, அருகேயிருந்த புங்க மரத்தில் ஒரு போடு போட்டான். வைரம் பாய்ந்த அந்த அடி மரத்தில் கத்தி மிக ஆழமாய்ப் பதிந்தது!

மாரப்பனுடைய உடம்பு பாதாதி கேசம் ஒரு கண நேரம் வெடவெடவென்று நடுங்கிற்று. எனினும் பொன்னன் தன்னைத் திரும்பிப் பார்ப்பதற்குள் ஒருவாறு சமாளித்துக் கொண்டான்.

''பழைய கதையை இனி மேல் மறந்துவிடு, பொன்னா! இளவரசர் என்னவோ இனி மேல் திரும்பி வரப் போவதில்லை. நம்முடைய காரியத்தை நாம் பார்க்க வேண்டியதுதான்.''

''நம்முடைய காரியம் என்ன இருக்கிறது இனி மேல்? எல்லாந்தான் போய் விட்டதே!''

''எல்லாம் போய்விட வில்லை. நானும் நீயும் இருக்கிற வரையில் எல்லாம் போய்விடாது. ஆனால் யுக்தியை மாற்றிக்கொள்ள வேண்டும். சண்டையினால் முடியாத காரியத்தைச் சமாதானத்தினால் முடித்துக்கொள்ள வேண்டும். நீ கெட்டிக்காரன், பொன்னா! நான் எல்லாம் கேள்விப்பட்டேன். சக்கரவர்த்தி இந்த வழியாகப் போனபோது, உன்னை அழைத்துப் பேசினாராம். நீயும் அவருக்குப் பணிந்தாயாம். இதுதான் சரியான யுக்தி. பெண்பிள்ளை பேச்சைக் கேட்காதே. வள்ளி ஏதாவது உளறிக் கொண்டு தானிருப்பாள். நீ மாத்திரம் எனக்குக் கொஞ்சம் ஒத்தாசை செய்தா யானால், சோழ நாட்டைக் காப்பாற்றலாம். விக்கிரமன் ஒரு வேளை திரும்பி வந்தால் அவனிடம் இராஜ்யத்தை ஒப்புவிக்கலாம். இராஜ்யம் அடியோடு கையை விட்டுப் போய்விட்டால், அப்புறம் திரும்பி வராதல்லவா?''



ஆரம்பத்தில் மாரப்பனின் பேச்சு பொன்னனுக்கு வேப்பங்காயாக இருந்தது. விக்கிரமனுக்கு இராஜ்யத்தை திருப்பிக் கொடுப்பது பற்றி பிரஸ்தாபித்ததும், பழைய சேனாதிபதி சொல்வதில் ஏதேனும் உண்மை இருக்குமோ என்று பொன்னனுக்கு யோசனை உண்டாயிற்று.

''நான் என்ன ஒத்தாசை செய்ய முடியும்?'' என்று அவன் கேட்டான்.

''பிரமாதமாக ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவி, அருள்மொழி ராணியைப் பார்க்க வரப்போவதாகப் பிரஸ்தாபம். நீ தானே படகு விடுவாய்? சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம் என்னைப் பற்றிப் பேசு. உனக்குத்தான் தெரியுமே, பொன்னா! வள்ளியின் பாட்டன் ஜோசியம் சொல்லியிருக்கிறான் அல்லவா? எல்லாம் அந்த ஜோசியம் பலிப்பதற்கு ஏற்றபடியே நடந்து வருகிறது. இல்லாவிட்டால், குந்தவிதேவி இப்போது இங்கே வர வேண்டிய காரணமேயில்லை, பார்!'' என்றான்.

குந்தவிதேவியை விக்கிரமன் மணந்து கொள்ள வேண்டுமென்னும் அருள்மொழி ராணியின் பழைய விருப்பம் பொன்னனுக்கு ஞாபகம் இருந்தது. எனவே, மாரப்பன் மேற்கண்டவாறு பேசியதும், பொன்னனுக்கு அவனிடமிருந்த வெறுப்பெல்லாம் திரும்பி வந்துவிட்டது; உள்ளுக்குள் கோபம் பொங்கிற்று. ஆயினும் அதை வெளியில் காட்டிக்கொள்ளாமல், ''அதற்கென்ன? சமயம் நேர்ந்தால் கட்டாயம் உங்களைப் பற்றி குந்தவிதேவியிடம் பேசுகிறேன்'' என்றான்.

''நீ செய்யும் உதவியை மறக்க மாட்டேன். பொன்னா! சக்கரவர்த்தி என்னைக் கூப்பிட்டிருக்கிறார். நாளைக்குப் பார்க்கப் போகிறேன். சேனாபதி வேலையை இப்போது எனக்குக் கொடுக்கப் போகிறார்.

பிறகு சோழ இராஜ்யமே என் கைக்குள் வருவதற்கு அதிக நாளாகாது. அப்போது உன்னைக் கவனித்துக் கொள்வேன்!'' என்று சொல்லிக்கொண்ட மாரப்பன் குதிரை மீதேறி அதைத் தட்டி விட்டான்.

## 20.சக்கரவர்த்தி சந்நிதியில்

**மா**ரப்ப பூபதி போனவுடனே பொன்னன் குதித்துக்கொண்டு குடிசைக்குள் சென்றான். வள்ளியின் கோபத்தை மாற்றுவதற்கு ஒரு வழி கிடைத்தது என்ற எண்ணம் அவனுக்குக் குதூகலம் உண்டாக்கிற்று.

மாரப்பன் சொன்னதையெல்லாம் - கொஞ்சம் கைச்சரக்கும் சேர்த்து - அவன் வள்ளியிடம் தெரிவித்தபோது உண்மையாகவே அவன் எதிர்பார்த்த பலன் கிட்டிற்று. அதாவது வள்ளியின் கோபமெல்லாம் மாரப்பன் மேல் திரும்பிற்று.

''ஓகோ! சக்கரவர்த்தியின் மகளை இவன் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். அதற்கு நீ தூதுபோக வேண்டுமா? என்னிடம் மட்டும் அந்த மாதிரி அவன் சொல்லியிருந்தால், தலையிலே உடனே ஒரு சட்டி நெருப்பைக் கொட்டியிருப்பேன்; நீ கேட்டுக்கொண்டு சும்மா வந்தாய்!'' என்றாள்.

''சும்மாவா வந்தேன்? உனக்கு என்ன தெரியும்? எப்பேர்ப்பட்ட கோபம் அப்போது எனக்கு வந்தது தெரியுமா வள்ளி! அவன் வாளைக்கொண்டே அவன் தலையை வெட்டிப் போடப் பார்த்தேன்; புங்க மரம் நடுவிலே நின்று தடுத்து விட்டது!'' என்றான்.

''ஆமாம்; நீ வாய்வெட்டுத்தான் வெட்டுவாய்! வாள் வெட்டுக்கு உன் கையிலே சக்தி இருக்கிறதா?'' என்றாள் வள்ளி.

பொன்னன், ''இங்கே வா! நான் சொல்லுகிறது நிஜமா, இல்லையா என்று காட்டுகிறேன்'' என்று சொல்லி அவள் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக்கொண்டு போனான். புங்க மரத்தில் கத்தி வெட்டு ஆழமாய்ப் பதிந்திருந்ததைக் காட்டினான்.

அதைப் பார்த்ததும் வள்ளியின் முகம் மலர்ந்தது. ''இந்த வெட்டை மரத்தில் ஏன் போட்டாய்? பாவம் பச்சை மரம்! அவன் மேலேயே போடுகிறதுதானே'' என்றாள்.

''இருக்கட்டும்; ஒரு காலம் வரும். அப்போது போடாமலா போகிறேன்?'' என்றான் பொன்னன்.

பிறகு, இருவரும் மேலே என்ன செய்வதென்று வெகு நேரம் யோசித்தார்கள்.

''நீதான் அன்றைக்குச் சக்கரவர்த்திக்குக் கும்பிடு போட்டுக் காலில் விழுந்தாயே! அவரை உறையூரில் போய்ப் பார்த்து எல்லாவற்றையும் சொல்லிவிடேன்'' என்றாள் வள்ளி.

''நான் கலகத்தில் சம்பந்தப்பட்டவன் என்று உறையூரில் எல்லாருக்கும் தெரியுமே! உறையூருக்குள் என்னைப் போக விடவே மாட்டார்கள். அதிலும் சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டுமென்று சொன்னால் சந்தேகப்பட்டுக் காராக்கிரகத்தில் பிடித்துப் போட்டு விடுவார்கள்'' என்று பொன்னன் சொன்னான்.

''அப்படியானால், நான் போய்விட்டு வரட்டுமா?'' என்றாள் வள்ளி.

''நீ எப்படி சக்கரவர்த்தியைப் பார்ப்பாய்? உன்னை யார் விடுவார்கள்?''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது, குடிசையின் வாசலில் குதிரைகள் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

'யார் இப்போது குதிரைமேல்

''இந்த வெட்டை மரத்தில் ஏன் போட்டாய்? பாவம் பச்சை மரம்! அவன் மேலேயே போடுகிறதுதானே'' என்றாள் வள்ளி!

வந்திருக்க முடியும்?' என்று யோசித்துக் கொண்டே வள்ளியும் பொன்னனும் வெளியில் வந்தார்கள். பல்லவ வீரர்கள் ஐந்தாறு பேர் வந்திருப்பதைப் பார்த்ததும், அவர்களுக்குக் கொஞ்சம் திடுக்கிட்டது.

**வ**ந்த வீரர்களின் தலைவன், ''ஓடக்காரா! உன்னைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வரும்படி சக்கரவர்த்தியின் கட்டளை. மரியாதையாய் உடனே புறப்பட்டு வருகிறாயா? விலங்கு பூட்டச் சொல்லட்டுமா?'' என்றான்.

பொன்னன் கலவரமடைந்த முகத்துடன் வள்ளியைப் பார்த்தான். வள்ளி துணிச்சலுடன் வீரர் தலைவனை நோக்கி, ''சோழ நாட்டில் மரியாதைக்கு எப்போதும் குறைச்சல் இல்லை, ஐயா! நீங்கள் பிறந்த ஊரில்தான் மரியாதைக்குப் பஞ்சம் போலிருக்கிறது!'' என்றாள்.

''ஓகோ! நீதான் வாயாடி வள்ளியா? உன்னையுந்தான் கொண்டுவரச் சொன்னார், சக்கரவர்த்தி!''

''ஆகா! வருகிறேன். உங்கள் சக்கரவர்த்தியை எனக்குந்தான் பார்க்க வேண்டும். பார்த்து, 'உறையூரிலிருந்து காஞ்சிக்குப் போகும்போது கொஞ்சம் மரியாதை வாங்கிக்கொண்டு போங்கள்!' என்று சொல்ல வேண்டும்'' என்றாள்.



**ச**க்கரவர்த்தியின் விஜயத்தை முன்னிட்டு உறையூர் வீதிகள் அழகாக அலங்கரிக்கப்பட்டிருப்பதைப் பார்த்தபோது, பொன்னனுக்கும் வள்ளிக்கும் ஆத்திரமும் துக்கமும் பொங்கிக் கொண்டு வந்தன. முன் தடவை உறையூர் இவ்வளவு அலங்காரத்துடன் காட்சியளித்தது, பார்த்திப மகாராஜா போருக்குக் கிளம்பிய சமயத்தில்தான். ஆகா! அதையெல்லாம் சோழ நாட்டு ஜனங்கள் அடியோடு மறந்து விட்டார்கள் போலிருக்கிறது! பார்த்திப மகாராஜாவின் மரணத்துக்குக் காரணமான நரசிம்மச் சக்கரவர்த்தியின் விஜயத்துக்காக இப்படியெல்லாம் நகரலங்காரம் செய்திருக்கிறார்களே! இது என்ன அவமானம்? சோழ நாட்டுக்கு என்ன கதி நேர்ந்து விட்டது? அருள்மொழி ராணி இப்போது உறையூருக்கு வந்து இந்தக் கோலாகலங்களையெல்லாம் பார்த்தால் மனம் சகிப்பாரா?- இவ்விதம் பேசிக் கொண்டே பொன்னனும் வள்ளியும் சக்கரவர்த்திக்கென்று புதிதாக அமைக்கப்பட்டிருந்த அரண்மனையை அடைந்தார்கள்.

அந்த அரண்மனையின் பெருமிதமும், அதில் காணப்பட்ட சிற்ப வேலைப்பாடுகளும் அவர்களை பிரமிக்கச் செய்தன; அவர்களின் ஆத்திரத்தையும் அதிகப்படுத்தின. சோழ மன்னர்கள் அமர்ந்து ஆட்சி செலுத்த வேண்டிய இடத்தில் வெளியூரான் வந்தல்லவா இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறான்?

அரண்மனைக்குள் அவர்கள் ஓர் அறையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டார்கள். அதற்கு அடுத்த அறையில் பேச்சுக் குரல்கள் கேட்டுக் கொண்டிருந்தன. கம்பீரமான ஓர் ஆண் குரல் அதிகமாகக் கேட்டது. ஓர் இளம் பெண்ணின் இனிய குரலும், சிரிப்பின் ஒலியும் இடையிடையே கேட்டன. ஈனஸ்வரத்தில் இன்னொரு ஆடவன் குரலும் கேட்டது. அது மாரப்ப பூபதியின் குரல் மாதிரி இருக்கவே, பொன்னன் திடுக்கிட்டான்.

சக்கரவர்த்திக்கு விரோதமான சதியாலோசனையில் கலந்துகொண்டதன் பொருட்டு விசாரிப்பதற்காகத்தான் சக்கரவர்த்தி தங்களை அழைத்துவரச் செய்தி

ருக்க வேண்டும் என்று, பொன்னனும் வள்ளியும் கிளம்பும்போது ஊகித்தார்கள். விசாரணையின்போது தைரியமாக மறுமொழி சொல்லி, சக்கரவர்த்திக்குப் பொன்னன் கும்பிட்ட அவமானத்தைத் துடைத்துக்கொள்ள வேண்டுமென்றும் அவர்கள் பேசிக்கொண்டு வந்தார்கள். மாரப்ப பூபதியின் ஈனக் குரலிலிருந்து தாங்கள் ஊகித்தது சரிதான் என்று அவர்களுக்குப்பட்டது. அப்போது வள்ளி, பொன்னன் காதோடு ஏதோ சொன்னாள்.



அவள் சொல்லி முடிப்பதற்குள், உள்ளேயிருந்து கம்பீரமான குரல், ''எங்கே? அந்த ஓடக்காரனைக் கொண்டு வா'' என்று கட்டளையிட்டது. பொன்னனையும் வள்ளியையும் அடுத்த அறைக்குள் கொண்டு போனார்கள். அங்கே நவரத்தினகசிதமான சிங்காதனத்தில் சக்கரவர்த்தி கம்பீரத் தோற்றத்துடன் வீற்றிருப்பதையும், அவருக்கு அருகில் குந்தவி தேவி சாய்ந்துகொண்டு நிற்பதையும், எதிரே மாரப்பன் குனிந்த தலையுடனும் நடுங்கிய உடம்புடனும் எண் சாணுடம்பும் ஒரு சாணாய்க் குறுகி நிற்பதையும், வள்ளியும், பொன்னனும் போகும்போதே பார்த்துக் கொண்டார்கள். சக்கரவர்த்தியின் எதிரில் போய் நின்ற பிறகு அவர்களால் தலை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. சக்கரவர்த்தியின் முகத்தில் பொங்கிய தேஜஸானது அப்படிக் கண்களைக் கூசச் செய்து, அவர்களுக்கு அடக்க ஒடுக்கத்தை அளித்தது.

மாமல்லச் சக்கரவர்த்தி இடி முழக்கம் போன்ற குரலில் சொன்னார்:-

''ஓகோ! இவன்தானா? தோணித் துறையில் அன்றைக்குப் பார்த்தோமே? வெகு சாதுவைப் போல் வேஷம்போட்டு நடித்தான். நல்லது, நல்லது! படகு தள்ளுகிறவன் கூடப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு விரோதமாகச் சதி செய்வதென்று ஏற்பட்டு விட்டால், அப்புறம் கேட்பானேன்? அழகுதான்!''

இவ்விதம் சக்கரவர்த்தி சொன்னபோது, பொன்னனும் வள்ளியும் அடியோடு தைரியத்தை இழந்துவிட்டார்கள். அவர்களுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. தோணித் துறையில் இனிய வார்த்தை பேசிய சக்கரவர்த்திக்கும், இங்கே நெருப்புப் பொறி பறக்கும்படி பேசும் சக்கரவர்த்திக்கும் காணப்பட்ட வித்தியாசம் அவர்களைத் திகைக்கச் செய்துவிட்டது.

**''படகு தள்ளுகிறவன் கூட பல்லவ சாம்ராஜ்யத்துக்கு விரோதமாகச் சதி செய்வதென்று ஏற்பட்டுவிட்டால், அப்புறம் கேட்பானேன்?''**

சக்கரவர்த்தி மேலும் சொன்னார்:

''இருக்கட்டும்; உங்களைப் பின்னால் விசாரித்துக் கொள்கிறேன். ஓடக்காரா! நான் இப்போது கேட்பதற்கு மறுமொழி சொல்லு. ஏன் தலையைக் குனிந்து கொள்கிறாய்? நிமிர்ந்து என்னைப் பார்த்து உண்மையைச் சொல்லு. நமது சாம்ராஜ்யத்துக்கு விரோதமாகக் கலகம் செய்யும்படி விக்கிரம இளவரசரை முக்கியமாகத் தூண்டிவிட்டது யார்...?''

பொன்னன் பளிச்சென்று நிமிர்ந்து பார்த்து, ''பிரபோ! இதோ உங்கள் முன்னால் நிற்கிறாரே, இந்த மாரப்ப பூபதிதான்!'' என்றான்.

*(தொடரும்)*



உ

ஸ்ரீ அருணாசலேஸ்வரர் துணை

# க்ருத்திகா மஹோத்ஸவ ரிக்வேத, சாமவேத, வேத பாராயணம்

திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் ஜோதி ஸ்வரூபமாய் விளங்கும் ஸாக்ஷாத் பரமேஸ்வரனை தியானித்து, வேதவித்துக்கள் பகவானுக்கே உகந்ததான ரிக்வேதம், ஸாமவேதம், அதர்வண வேத பாராயணம் செய்கிறார்கள். ஐப்பசி மாதம் 29-ந் தேதி (15.11.2007) வியாழக்கிழமை முதல் கார்த்திகை மாதம் 8-ந் தேதி (24.11.2007) வரை காலை 8:00 மணி முதல் 11:00 மணி வரையில் ஸ்ரீ அருணாசலேசுவரர் ஆலயத்திலும், மதியம் 3:30 மணி முதல் 5:30 மணி வரையிலும், பின்னர் மாலை 6:30 மணி முதல் 8:00 மணி வரையிலும் ஸ்ரீ சுந்தரேசானந்தா சபையிலும் பாராயணம் நடக்க இருப்பதால் பக்தர்கள் இந்த மாபெரும் யக்ஞத்தில் கலந்துகொண்டு எல்லா விதத்திலும் உதவிகளை செய்து அருணாசல ஸ்வரூபமாக விளங்குகின்ற வேத வித்துக்களின் பரிபூரண ஆசீர்வாதத்திற்கு பாத்திரராகும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**ஒரு நாள் சமாராதனை செலவு: ரூ.1500/-**
**வேஷ்டி 1-க்கு ரூ.500/- ஒரு நபர் சம்பாவனை ரூ.5000/-**

| தமிழ் தேதி | ஆங்கில தேதி | கிழமை | உற்சவ விபரம் |
|---|---|---|---|
| ஐப்பசி 29-ந் தேதி | 15.11.2007 | வியாழன் | முதல் திருவிழா காலை கொடியேற்றம் |
| ஐப்பதி 30-ந் தேதி | 16.11.2007 | வெள்ளி | 2-ம் நாள் திருவிழா - இந்திரவிமானம் |
| கார்த்திகை 1-ந் தேதி | 17.11.2007 | சனி | 3-ம் நாள் திருவிழா - சிம்மவாகனம் |
| கார்த்திகை 2-ந் தேதி | 18.11.2007 | ஞாயிறு | 4-ம் நாள் திருவிழா - கற்பக விருட்சம் காமதேனு |
| கார்த்திகை 3-ந் தேதி | 19.11.2007 | திங்கள் | 5-ம் நாள் திருவிழா-வெள்ளி ரிஷப வாகனம் |
| கார்த்திகை 4-ந் தேதி | 20.11.2007 | செவ்வாய் | 6-ம் நாள் திருவிழா - வெள்ளி தேர் |
| கார்த்திகை 5-ந் தேதி | 21.11.2007 | புதன் | 7-ம் நாள் திருவிழா - பெரிய தேர் |
| கார்த்திகை 6-ந் தேதி | 22.11.2007 | வியாழன் | 8-ம் நாள் திருவிழா - குதிரை வாகனம் |
| கார்த்திகை 7-ந் தேதி | 23.11.2007 | வெள்ளி | 9-ம் நாள் திருவிழா - கைலாச வாகனம் |
| கார்த்திகை 8-ந் தேதி | 24.11.2007 | சனி | 10-ம் நாள் திருவிழா-காலை 6:00 மணிக்குள் பரணி தீபம் மாலை 6:00 மணிக்கு மஹா தீபம் |

**சாமவேத ரித்விக்குகள் - 8, ரிக்வேத ரித்விக்குகள் - 4**

M.O., D.D. அனுப்ப விரும்புவோருக்கு விலாசம்:


**ஸ்ரீ A. சந்தானம்**
பொருளாளர், வேத பாராயண கமிட்டி,
**மூர்த்தி காபி ஒர்க்ஸ்**
49, தேரடி வீதி, திருவண்ணாமலை - 606 601
போன்: 04175 - 222719; 253166




28.10.2007
முதல்
3.11.2007
வரை...

மேஷம்: மன தைரியம், தன்னம்பிக்கை நிறைந்த வாரம். எதிர்பாராத தனயோகம் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சிலருக்கு வேலையில் இடமாற்றம் ஏற்படும். வியாழன்தோறும் தட்சிணாமூர்த்தி சுவாமிக்குப் பூ வைத்து, நெய் தீபம் ஏற்றி வந்தால், சங்கடங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

ரிஷபம்: நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். குழந்தைகளால் மகிழ்ச்சி கிட்டும். சிலருக்கு வீடு மாற்றம் செய்யும் சூழ்நிலை உருவாகும். வேலைப் பளு அதிகரிக்கும். சனிக்கிழமைதோறும் ஐயப்பன் கோயில் சென்று, நெய் தீபம் ஏற்றிப் பூ வைத்து வழிபட்டு வந்தால், நன்மையின் பலன் அதிகரிக்கும்.

மிதுனம்: தெய்வ அனுகூலம் நிறைந்த வாரம். உடன்பிறப்புகளால் நற்பலன் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வெற்றி பெறும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். நீண்ட, வராத நிலுவைகள் வசூலாகும். வியாழக்கிழமைதோறும் ராகவேந்திர சுவாமியைத் தரிசனம் செய்யவும்.

கடகம்: மன சந்தோஷம் கிட்டும். நினைத்த காரியம் ஈடேறும். நண்பர்களால் உதவி ஏற்படும். கல்வி வளம் மேன்மை பெறும். எதிர்பாராத வழியில் நல்ல தகவல் வந்து சேரும். வேலை செய்யும் இடங்களில் நமக்கு எதிரிகள் அருகிலேயே இருப்பார்கள், உஷார். செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் கேது/ராகுவுக்கு நெய் தீபம் ஏற்றி, பூ வைத்து வழிபட, சங்கடங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

# நடக்குமென்பார்;

# தஞ்சை பரத்வாஜ்

**சிம்மம்:** தெய்வ அனுகூலத்தால் நினைத்த காரியம் ஈடேறும். மனக் குழப்பம் தீரும். வாக்கு வன்மை மேலோங்கும். சிலருக்கு உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். இல்லற வழியில் விட்டுக்கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். வீண் அலைச்சல் ஏற்படும். நாணயம் காப்பாற்றப்படும். ராகு/கேது/சனி/குரு இவர்களுக்கு அந்த அந்தக் கிழமைகளில் நெய் தீபம் ஏற்றி, பூ வைத்து வழிபட்டு வந்தால் நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** மனப் பிரம்மை தீரும். தொட்டது துலங்கும். கல்வி வளம் மேலோங்கும். நீண்ட காலப் பிரச்னை முடிவுக்கு வரும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கல்வி வளம் மேலோங்கும். நீண்ட நாள் வராத நிலுவைகள் வந்து சேரும். வியாழன்/சனிக்கிழமைகளில் நவக்கிரக தீபம் ஏற்றி ஒன்பது முறை வலம் வந்தால் நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** பூமி மூலம் ஆதாயம் கிட்டும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். பொருளாதாரச் சிரமம் இருக்காது. நெருங்கிய கூட்டாளிகள் விட்டு விலகிச் செல்வார்கள். குழந்தைகள் இடம்மாறிப் போவார்கள். தனிக்குடித்தனம் செல்ல நேரிடும். வேலையில் ப்ரொமோஷன் கிட்டும். ராகு/கேதுவுக்குப் பூ வைத்து வழிபட்டு வந்தால் நற்பெயர் உண்டாகும்.

**விருச்சிகம்:** பணப் பற்றாக்குறை தீரும். சொசைட்டியில் நல்ல மதிப்பும் மரியாதையும் பெருகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கடன், வழக்கு, வியாபாரம் முடிவுக்கு வரும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். ராகு/கேது/சனி/குருவுக்கு நெய் தீபம் ஏற்றி வந்தால் நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** நீண்ட தூரப் பிரயாணம் போகும் சூழ்நிலை உருவாகும். பணக் கஷ்டம் இருக்காது. எதிர்ப்புகள் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தடை விலகித் திருமணம் கைகூடும். குழந்தைகளால் மன சந்தோஷம் ஏற்படும். வேலையில் உயர்வு ஏற்படும். வியாழன் தோறும் நவக்கிரக வழிபாடு செய்து வரவும்.

**மகரம்:** நீண்ட நாள் நடைபெற்று வந்த வழக்கு முடிவுக்கு வரும். யோசித்து ஆலோசனை செய்து புதிய தொழில் முயற்சியில் இறங்கவும். உடல் நிலையில் கவனம் தேவை. உணவு விஷயத்தில் எச்சரிக்கையுடன் இருக்கவும். வாக்குவாதம் தவிர்க்கவும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வரவும்.

**கும்பம்:** மனநிறைவு மிகுந்த வாரம். கடன் தொல்லை தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கல்வி வளம் மேலோங்கும். சுப நிகழ்ச்சி கைகூடும். சிலருக்கு ஊதிய உயர்வு ஏற்படும். ராகு/கேது/குருவுக்குத் தீபம் ஏற்றி ஒன்பது முறை வலம் வந்தால் நற்பலன் கிட்டும்.

**மீனம்:** திடீர் பிரயாணம் வந்து சேரும். சுபநிகழ்ச்சி கைகூடும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வேலையில் நற்பெயர் உண்டாகும். உடல்நிலை சீராகும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. வீடு/மனை வாங்க நல்ல நேரம். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கல்வியில் மேன்மை ஏற்படும். பரிகாரம் தேவை இல்லை.

நடக்கும்!



# உள்ளும் புறமும்

## மருதன்

அங்கே அபூர்வம். கைகள் இருக்கும். இரண்டல்ல. இரண்டரை அல்லது மூன்றேகால். இடுப்புக்குக் கீழே கால் இருக்க வேண்டிய பகுதியில் கை. மார்புக்கு வெளியில் துருத்திய

# போபால்

**போ**பால், டிசம்பர் 2, 1984. போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு பகுதிவாசிகள் உறங்க ஆரம்பித்தபோதே நச்சுப் புகை கசிய ஆரம்பித்திருக்கிறது. மொத்தம் ஐந்து லட்சம் பேர். துடிக்கத் துடிதுடிக்க எழுந்து ஓட ஆரம்பித்தார்கள். என்ன, ஏது என்று தெரியவில்லை. உறக்கம் கலைந்த எரிச்சல் கண்களுக்கு. ஆனால், மார்பு முழுவதும் ஏன் எரிய வேண்டும்? ஏன் இத்தனை இருமல்? கை, கால்கள் ஏன் பின்னிக் கொள்கின்றன? இதென்ன சாத்தானின் வேலையா? முன்னரே இறந்துபோன குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு வாசலுக்கு ஓடினார்கள் பெண்கள். தடுக்கி விழுந்தார்கள். வாசல் முழுவதும் பிணங்கள். அலற வேண்டும் என்றுகூடத் தோன்றவில்லை. அன்றைய தினம் இறந்துபோனவர்கள் மட்டும் 8000 பேர்.

எப்போதோ நடந்த ஒரு துக்கச் சம்பவம் அல்ல இது. காரணம் 1984-ல் குழி தோண்ட ஆரம்பித்தவர்கள் இன்னமும் தோண்டிக்கொண்டுதான் இருக்கிறார்கள். இன்றைய தேதி வரை நச்சு வாயுத் தாக்குதலால் இறந்துபோனவர்களின் எண்ணிக்கை 22,000. பிரசவம் என்றாலே துடிதுடித்துப் போகிறார்கள் பெண்கள். ஆணா, பெண்ணா? கறுப்பா சிவப்பா? அப்பா ஜாடையா, அம்மா ஜாடையா? அக்கறையில்லை அவர்களுக்கு. ஐயோ கடவுளே, குழந்தை உயிருடன், முழுமையாக இருக்கிறதா?

ஓர் உயிர் முழுமையாக பிறப்பது

படி துடிக்கும் இருதயம். உடைந்த வாய். பானைபோல் வீங்கிய தலை. வேலை செய்யாத சிறுநீரகம். ரத்த ஓட்டம் இல்லாத உடல். பார்வையற்ற மூன்று கண்கள். பின்பக்கம் வால். சில சமயம், இன்னது தான் என்று கண்பிடிக்கவே இயலாத வகையில் கனமான ஒரு மாமிசத் துண்டு பிரசவம் ஆவதுண்டு.

ஒருவேளை குழந்தை ஆரோக்கியமாகப் பிறந்துவிட்டால் நான்பட நான்பட



குறைபாடுகள் ஒவ்வொன்றாக வெளியில் வர ஆரம்பிக்கும். கை, கால் முடக்கம், சிறுநீரகக் கோளாறு, சுவாசக் குறைபாடுகள், மன அழுத்தம் என்று வகை வகையான நோய்கள். இன்றைய தேதியில் 1,20,000 பேருக்கும் அதிகமானவர்கள் தீவிர மருத்துவ சிகிச்சை பெறாமல் தத்தளித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த நச்சு வாயு கசிந்தது யூனியன் கார்பைடு என்னும் ரசாயன நிறுவனத்திலிருந்து. அந்த நிறுவனத்தின் தலைவர் வாரன் ஆண்டர்ஸன். பாய்ந்து சென்று அவரை அமுக்கினார்கள். ஒரு சில நாட்கள். தன் கோட் மீதும், டை மீதும் படிந்திருந்த தூசியை ஊதிவிட்டபடியே வெளியில் வந்துவிட்டார் அவர். வந்த கையோடு அமெரிக்காவுக்குப் பறந்துவிட்டார். குட்டியூண்டு பூட்டு ஒன்றைக் காசு கொடுத்து வாங்கி ஃபாக்டரிக்கு வெளியில் பூட்டிவிட்டார்கள். ஆச்சு.

கமிட்டி மேல் கமிட்டி வைத்தார்கள். யூனியன் கார்பைட் மீதும் ஆண்டர்ஸன் மீதும் வழக்குப் பதிவு செய்தார்கள். அமெரிக்காவுக்கு ஃபாக்ஸ் அனுப்பினார்கள். கூரியரில் குற்றப் பத்திரிகை. கூடவே இரண்டு கோரிக்கைகள். பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டஈடு தா. ஆண்டர்ஸனை இந்தியாவுக்கு அனுப்பு.

'எங்களைக் கேட்காதே; யூனியன் கார்பைடைக் கேட்டுக்கொள்' என்றது அமெரிக்கா. அமெரிக்க கம்பெனிதான். ஆனால், இயங்கிக்கொண்டிருந்தது இந்தியாவில் அல்லவா? 'எங்களுக்கு எதுவும் தெரியாது. நாங்கள் பாதுகாப்புடன்தான் வேலை செய்துகொண்டிருந்தோம். இந்த விபத்து எப்படி நேர்ந்தது என்றே எங்களுக்குத் தெரியாது' என்று உதட்டைப் பிதுக்கியது யூனியன் கார்பைட். இந்தியா முன்வைத்த மனுவை கையில் எடுத்துப் பார்த்துவிட்டு, ரொம்ப அதிகம் என்று முணுமுணுத்த அதிகாரிகள், 'வேண்டுமானால் பத்து, பதினைந்து பர்செண்ட் தருகிறோம் ஓகேவா' என்று கண்ணடித்தார்கள். ஆண்டர்ஸன்? ரிடையர்மெண்ட் வாங்கிவிட்டார். ஏதோ ஒரு ரிசார்ட்டில், கடற்கரை மணலில் பல வண்ணக் குடையின் கீழே காலை நீட்டி அமர்ந்து ஆரஞ்சுப் பழச் சாறு உறிஞ்சிக்கொண்டிருக்கிறார்.

# பயங்கரம்!

நவம்பர் 1988-ல் உச்சநீதிமன்றத்தின் உந்துதலால் யூனியன் கார்பைடு அழுதுகொண்டே 470 மில்லியன் அமெரிக்க டாலரை நஷ்டஈடாக அளிக்க முன் வந்தது. அதாவது, இந்தியா விண்ணப்பித்திருந்த தொகையில் இருந்து வெறும் பதினைந்து சதவீதம் மட்டுமே. 5 லட்ச சொச்சம் பேருக்கு நஷ்டஈட்டுத் தொகை பிரித்துக் கொடுக்கப்பட்டதாகச் செய்தி வெளிவந்தன.




இந்த நிமிடம் வரை பல ஆயிரம் டன் ரசாயன நச்சுப் பொருள்கள் போபால் முழுவதும் சிதறிக் கிடக்கின்றன. நிலத்தடி நீரில் நஞ்சு. கிணற்றில், குழாய் நீரில் நஞ்சு. பெண்களின் மார்பில் சுரக்கும் பாலில் என்னவோ ஒரு பெயரில், எத்தனையோ



சதவீத நஞ்சு கலந்திருப்பதாக ஒரு மருத்துவக் குழு அறிக்கை சமர்ப்பித்திருக்கிறது. ஆக, அடுத்தடுத்த தலைமுறைக்கும் சேர்த்தே குழி தோண்ட வேண்டியிருக்கும்.

இன்னும் எத்தனை லட்சம் பேர்? எத்தனை லட்சம் குழந்தைகள்? இன்னும் என்னென்ன கோர நோய்கள் போபாலைத் தாக்கக் காத்திருக்கின்றன? தெரியவில்லை. ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். பாதிக்கப்பட்டவர்களை மீட்க என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி ஒரு தெளிவான திட்டம் இன்றைய தேதி வரை உருவாக்கப்படவில்லை. எவ்வளவு செலவு ஆகும்? தெரியவில்லை.

1993ஆம் ஆண்டு அமெரிக்க உச்சநீதிமன்றம் அறிவித்த தீர்ப்பு இது. பசி, பட்டினி, பிரசவம், நோய் என்று போபாலில் இருந்து ஒரு பெட்டிஷன்கூட அமெரிக்காவுக்கு வரக்கூடாது. ஒரு டாலர் கூட இங்கிருந்து இனி கிடையாது.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த மக்கள், குமுறி வெடிக்க ஆரம்பித்தார்கள். ஒவ்வொரு நாளும் புதுப் புது வியாதிகள். இறப்பு சதவிகிதம் உயர்ந்து கொண்டே போகிறது. எல்லாவற்றையும்விட கொடுமையான மற்றொரு தகவல், யூனியன் கார்பைட் கொடுத்த அந்த கொஞ்ச நஞ்ச நஷ்டஈடும்கூட பெரும்பாலான மக்களுக்குப் போய்ச் சேரவில்லை. அரசியல்வாதிகள், உயர் அதிகாரிகள் என்று யார் யாரோ இடையில் புகுந்து பொய்க் கணக்குக் காட்டி சுருட்டிக் கொண்டுவிட்டார்கள். எங்கே சென்று, யார் சட்டையைப் பிடிப்பது?

அன்று அனுபவித்த அதே எரிச்சலை மீண்டும் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் போபால் மக்கள். கோபம், வெறுப்பு, தவிரவும், துக்கம். அமெரிக்கா கைவிரித்துவிட்டது. யூனியன் கார்பைடு என்று ஒரு கம்பெனியே இன்று இங்கே இல்லை. ஆண்டர்ஸன் ஆப்பிள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்.

இந்திய அரசாங்கம்? என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் அத்தனை பேரும்? பெயரை மாற்றிக்கொண்டால் விட்டு விடுவீர்களா? எங்களுக்குப் பணம் வேண்டும். நீங்கள் கொடுக்கும் பிசாத்துப் பணம் செத்துப் போனவர்களைத் திருப்பித் தராது. ஆனால், உடைந்து போய் கிடக்கும் எங்கள் குழந்தைகளின் கன்னங்களைச் சரி செய்ய எங்களுக்குப் பணம் வேண்டும். ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காண்பிக்கலாம். பிறக்கும் அத்தனை குழந்தைகளின் கன்னங்களிலும் யூனியன் கார்பைட் மாறிமாறி அறைந்து கொண்டிருக்கிறது. இனி, நாங்கள் எந்தக் காற்றை சுவாசிப்பது? எந்த நீரை அருந்துவது? என்ன சாப்பிடுவது? இதற்கெல்லாம் யார் காரணம்? நாங்கள் என்ன செய்ய வேண்டும்? எங்களை என்ன செய்யப்போகிறீர்கள்? ●



# ஆறாம் ஆண்டு நினைவஞ்சலி



(அப்பிபட்டி - தெய்வத்திரு)

## R.K. இராமலிங்கம் பிள்ளை

கம்பம், தேனி மாவட்டம்.

"உலக விசயங்களில் அதிகப்பற்று வைக்காமல்
எம்பெருமான் காட்டிய வழியில்
தாமரை இலைத் தண்ணீர் போல் வாழ்ந்து மறைந்த
எம் தந்தைக்கு அஞ்சலி"

- குடும்பத்தினர்

# இது விளையாட்டல்ல!

ச.ந.கண்ணன்

இந்த வருடம் இந்தியாவில் தீபாவளி முன்கூட்டியே தொடங்கவிருக்கிறது. அடுத்த மாதம் முழுக்க இந்தியாவில் தங்கி, ஐந்து ஒரு நாள் போட்டிகளிலும் மூன்று டெஸ்ட்களும் ஆடவிருக்கிறது பாகிஸ்தான் அணி. நவம்பர் ஐந்தாம் தேதி முதல் ஒருநாள் போட்டி.

பொதுவாக எல்லா உறவுகளுக்கும் நல்ல தொடக்கம் இருக்கும். ஆரம்பத்தில் பாகிஸ்தானுடன் விளையாடுவதும் அதனை வெல்வதும் இந்தியாவுக்கு அத்தனை பெரிய சிரமமாக இருக்கவில்லை (ஒன்பது ஆட்டங்களில் ஆறில் இந்தியாவுக்கு வெற்றி). பெரிய திருப்பம் 1986ல் ஷார்ஜாவில் ஏற்பட்டது. அப்போது இந்தியா நடப்பு உலக சாம்பியன். அரசியல் காரணங்களால் இந்தியாவும் பாகிஸ்தானும் அவரவர் நாடுகளில் சந்திக்க முடியாத சூழல். ஏப்ரல் 18 அன்று ஷார்ஜாவில் இறுதிப் போட்டி நடந்தது. கடைசிப் பந்தில் நான்கு ரன்கள் தேவை. ஆனால், சேத்தன் சர்மா வீசிய பந்தை சிக்ஸருக்குத் தள்ளினார் மியாண்டட். உலகின் ஒரு கோடியான ஷார்ஜாவில் நடந்த அந்த ஆட்டம் உலகம் முழுக்கப் பேசப்பட்டது. மியாண்டடுக்கு ஒரு கோடி ரூபாய் சன்மானம் வழங்கப்பட்டது. அன்று முதல் பாகிஸ்தான் கிரிக்கெட் புனர்ஜென்மம் எடுத்தது. அடுத்து நடந்த ஒன்பது ஆட்டங்களில் இந்தியாவால் ஓர் ஆட்டத்தில் மட்டுமே பாகிஸ்தானை வெல்ல முடிந்தது.

நாளாக ஆக இரு அணிகளுக்குமிடையே ஓர் அந்நியச் சுவர் எழுந்துவிட்டது. இந்தியா - பாகிஸ்தானின் அடுத்தடுத்த சந்திப்புகளில் விளையாட்டு என்பது பின்னுக்குத் தள்ளப்பட்டது. இந்தியாவிடம் ஜெயிப்பதைக் கௌரவமாக எண்ணினார்கள் பாகிஸ்தான் ரசிகர்கள்.

இந்தியாவில் நிலைமை இன்னும் மோசம். கிரிக்கெட்டோடு அரசியலும் கலந்துகொள்ள, இந்து-முஸ்லிம் பிரச்னைகள் கிரிக்கெட்டிலும் எதிரொலிக்க ஆரம்பித்தன. ஒருசமயம் பாகிஸ்தான் இந்தியாவுக்கு டூர் வந்தபோது அவர்களை எதிர்த்து சிவசேனா கட்சியினர் கலகம் செய்தார்கள்.

இப்போது புதிய அத்தியாயம். ரிக்கி பாண்டிங் டோனியின் முகத்தில் கரியைப் பூசியதை எல்லோரும் மனமிறங்கி மன்னித்து விட்டார்கள். ஆஸ்திரேலியாவை ஜெயிக்கிற அளவுக்கு இந்திய அணி ஒன்றும் ஓர் அப்பழுக்கற்ற அணி அல்ல. கிரிக்கெட்டின் அடிப்படைத் தகுதிகளிலேயே இன்னமும் நாம் நிறைய பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. செக்குப் பயிற்சி முறைகளில் ஊறிப்போனவர்கள் நம்மவர்கள். விதிமுறைகளைவிட யதார்த்தத்தில் ஊறிப்போனவர்கள் ஆஸ்திரேலியர்கள். ஜெயிக்கும் வித்தைகளை மட்டுமே கற்று வருபவர்கள். நல்லவேளை, பிழைகள் செய்வதில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் பெரிய வேறுபாடுகள் கிடையாது. இங்கே நம்மை ஆஸ்திரேலியா கதிகலங்க வைத்தது என்றால், அவர்களுக்கு தென் ஆஃப்பிரிக்கா, டோனியைப் போலவே சோயிஃப் மாலிக் கேப்டனாகி நான்கு வாரங்கள்தான் ஆகியிருக்கின்றன.



மனித மனங்களின் வக்கரிப்புகளும் பிழைகளும் இன்றும் அதே தரத்தில்தான் இருக்கின்றன. மைதானத்துக்கு உள்ளே சொற்போர் ஒருபுறம் என்றால், வெளியே ரசிகர்களின் சீற்றம் அதற்குமேல் இருக்கிறது. சிமன்ட்ஸ் போன்ற வீரர்கள் கண்ணுக்கு தெரியாத எதிரிகளோடும் யுத்தம் நடத்த வேண்டியிருக்கிறது. இந்தியா - பாகிஸ்தான் தொடரில் அசம்பாவிதங்கள் எந்த ரூபத்திலும் தலை தூக்கலாம்.

கிரிக்கெட் முன்போலில்லை. நெருக்கடிகளும் போட்டிகளும் தலைவாயிலில் காத்திருக்கின்றன. ஆனால், இந்தியத் தேர்வுக் குழுவினரின் மன ஊஞ்சலோ, சீனியர்களுக்கும் ஜூனியர்களுக்கும் நடுவே ஆடிக்கொண்டிருக்கிறது. இன்றைக்கு டிராவிடின் ஈடுபாடு பற்றியும் அவருடைய உபயோகம் பற்றியும் எல்லோருக்கும் சந்தேகம் வந்துவிட்டது. ஏக காலத்தில் கேப்டன் பதவியையும் புகழையும் அவர் இழந்தாகிவிட்டது. ஒருநாள் போட்டிகளில் இனியும் சாதிக்க எதுவும் இல்லை என்கிற சூழ்நிலையில் கௌரவமாக அடுத்த தலைமுறைக்கு வழிவிடலாமே! பத்ரிநாத், திவாரி, ரைனா, பர்திவ் படேல் என சீனியர்களின் இடத்தைக் கைப்பற்றிக்கொள்ள ஒரு நீண்ட கியூ உள்ளதே!

பொதுவாக டோனி எதையும் வற்புறுத்துவது போலச் செய்வதில்லை. ஆனால், அவர் எண்ணப்படி நடந்துகொள்ளாததை மறந்துவிட மாட்டார். இதற்கு விளைவுகள் இருக்கும். டிராவிட், அகர்கர், தினேஷ் கார்த்திக், ஸ்ரீசாந்த் போன்றோரைத் தயவுதாட்சண்யம் பார்க்காமல் அவ்வப்போது அணியிலிருந்து நீக்கியது ஆரோக்கியமான மாற்றங்கள்; தேவைதான். இல்லாவிட்டால் 20-20க்கு மட்டுமே இவர் லாயக்கு என்கிற முத்திரை டோனியின் மீது அழுத்தமாகப் பதிந்துவிடுகிற அபாயம் இருக்கிறது. ●

சென்னையின் புறநகர்ப் பகுதியான மடிப்பாக்கத்தின் குடிசைப் பகுதி. அங்கு வசிக்கும் தீபா ரமணிக்கு இரண்டு பிள்ளைகள்; இரண்டு பெண்கள். மதிய உணவு சமையற்கூடத்தில் வேலை பார்த்த அவருக்குக் கஷ்ட ஜீவனம். எனவே, காலையிலும் மாலையிலும் இட்லி வியாபாரம் செய்து சிறிது வருமானம் ஈட்டினார். தினமும் அம்மா செய்த இட்லியை எடுத்துக்கொண்டு குடிசைப் பகுதி முழுவதும் சென்று விற்றுவிட்டு வருவான் மூத்த மகன் சரத் பாபு. வகுப்பில் முதல் மாணவனாக இருந்த சரத்பாபு, தன் அம்மா படும் கஷ்டங்களைப் பார்த்து மனவேதனைப் படுவான். ''நீ நல்லா படிக்கணும்; அதுக்காக நான் எவ்வளவு கஷ்டம் வேண்டுமானாலும் படத் தயார்!'' என்று தன் மகனிடம் தீபா ரமணி சொல்லும் போதெல்லாம், ''நான் நல்லா படிச்சு, நல்ல வேலைக்குப் போய் உன்னை உட்கார வெச்சு சாப்பாடு போடணும்மா! அதுதான் என் ஆசை'' என்று அடிக்கடிச் சொல்லுவான் சரத் பாபு.

இன்று சொன்னபடியே செய்து முடித்து, தன்னைப் பெற்றெடுத்த அம்மாவை சந்தோஷத்தில் திக்குமுக்காட வைத்திருக்கிறார் சரத்பாபு. அன்று குடிசைப் பகுதிகளில் இட்லி விற்ற பையன், இன்று தொழிலதிபர். அகமதாபாத்தில் இருக்கும் புகழ்மிக்க இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் மேனேஜ்மெண்ட்டில் வெற்றிகரமாக எம்.பி.ஏ. முடித்த கையோடு ''நான் சொந்தமாகத் தொழில் துவங்க விரும்புகிறேன்'' என்று சொல்லி, மிகப் பெரிய சம்பளத்தில் பிரபல நிறுவனம் ஒன்று கொடுக்க முன்வந்த வேலையை அன்புடன் மறுத்துவிட்டார். உடனடியாக 'ஃபுட் கிங்' என்ற பெயரில் அகமதாபாதில் கேட்டரிங் சர்வீஸ் ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்தி வருகிறார். இங்கு மட்டும் ஆறு கிளைகள். கோவாவில் ஒன்றும் திறந்திருக்கிறார். சுமார் நூற்றைம்பது பேருக்கு மேல் வேலைவாய்ப்பு அளித்திருக்கும் சரத்பாபுவின் லட்சியம் இந்தியாவெங்கும் கிளைகள் நிறுவி, ஐம்பதாயிரம் பேருக்குமேல் வேலை தர வேண்டுமென்பது.

# சபாஷ் பாபு!

''பள்ளிக்கூட நாட்களில் மற்ற பிள்ளைகள் போல மாலை நேரங்களில் விளையாடக்கூட போகமாட்டான் சரத். எப்போதும் படிப்புதான். வீட்டில் மின்சாரம் கிடையாது. மண்ணெண்ணெய் விளக்கில் நடு ராத்திரிவரை கண் விழித்து அவன் படிப்பதைப் பார்க்க எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும். 'உனக்கு எவ்வளவு படிக்கணும்னு ஆசையோ, அவ்வளவு படி! அம்மா எப்படியாவது கஷ்டப்பட்டு உன்னைப் படிக்க வைக்கிறேன்; கவலைப் படாதே!' என்று நான் அவனிடம் சொல்லுவேன்'' என்கிறார் சரத்பாபுவின் அம்மா தீபா ரமணி.

எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் நல்ல மார்க் வாங்கிய சரத், ராஜஸ்தான் மாநிலம் பிர்லா இன்ஸ்டிடியூட் ஆஃப் சயின்ஸ் அண்டு டெக்னாலஜியில் சேர்ந்தார்.

''எனக்கு இந்தியும் தெரியாது; ஆங்கிலத்திலும் என்னால் சரளமாகப் பேச முடியாது. ஆரம்ப நாட்களில் நான் தனிமைப் பட்டுவிட்டதாக உணர்ந்தேன். மூன்றாவது ஆண்டு படிக்கும்போது, ஒரு கண்காட்சியை நடத்துவதில் எனக்கு முக்கிய

பொறுப்பு அளிக்கப்பட்டது. அதனைச் சரியானபடி திட்டமிட்டு வெற்றிகரமாக நடத்தி முடித்தபோது, அனைவரும் என்னைப் பாராட்டினார்கள். அப்போதுதான் சில நண்பர்கள், 'உன்னிடம் நிர்வாகத் திறமை இருக்கிறது; எம்.பி.ஏ. படித்தால் நீ மிகச் சிறந்த நிர்வாகியாக வர முடியும்' என்று கூறினார்கள். அப்போதுதான் நான் முதல்முதலாக ஐ.ஐ.எம். என்ற நிர்வாகப் பயிற்சி பள்ளிகளைப் பற்றித் தெரிந்துகொண்டேன்.

இன்ஜினீயரிங் படிப்பை முடித்தவுடன், எனக்கு ஐ.ஐ.எம்.மில் சேர ஆசைதான். ஆனால், மகன் இன்ஜினீயராகி, நிறைய சம்பாதித்து, குடும்பக் கஷ்டத்தைப் போக்குவான் என்ற நம்பிக்கையில் என்னை கடன் வாங்கிப் படிக்க வைத்த அம்மாவை 'மேற்கொண்டு படிக்கப் போகிறேன்' என்று சொல்லிக் கஷ்டப்படுத்த விரும்பவில்லை. எனவே போலாரிஸ் நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்தேன். மூன்றாண்டுகள் வேலை பார்த்து, அம்மா பட்ட கடன்களை அடைத்து, என் மேற்படிப்புக்குத் தேவையான பணத்தையும் சேர்த்துக்கொள்ளத் திட்டமிட்டேன்.

ஐ.ஐ.எம். நுழைவுத் தேர்வுக்காகக் கடுமையாக உழைத்து என்னைத் தயார்படுத்திக்கொண்டு, நன்றாகப் பரீட்சை எழுதினேன். ஆனால், அந்தப் பரீட்சையின் கேள்வித்தாள் அவுட் ஆகி சர்ச்சை ஏற்பட்டது. அடுத்த வருடமும் முயற்சி செய்தேன். என்னால் வெற்றிபெற முடியவில்லை. மூன்றாம் முறை இன்னும் கடுமையாக முயற்சி செய்து வெற்றி பெற்றேன். ஐ.ஐ.எம்.மில் படிக்கும்போது, மாணவர்களின் மெஸ் ஒன்றுக்கு என்னைப் பொறுப்பாளர் ஆக்கினார்கள். நான் மெஸ்சில் கொண்டு வந்த மாற்றங்கள், அதனை நிர்வகித்த முறைக்கு மாணவர்கள் மத்தியில் ஏகப்பட்ட வரவேற்பு கிடைத்தது. இதனால் எம்.பி.ஏ. படித்த பிறகு நாமே சொந்தமாகத் தொழில் தொடங்க வேண்டும்; அதுவும் சாப்பாடு சம்பந்தமான பிசினஸாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன்'' என்று தான் கடந்து வந்த பாதை பற்றி அசை போடுகிறார் சரத்பாபு.

இப்போது தனது கேட்டரிங் சர்வீஸ் மூலமாகப் பல்வேறு தொழில் நிறுவனங்களுக்கும் மதிய உணவு சப்ளை செய்யும் காண்ட்ராக்டைப் பெற்றிருக்கிறார் சரத்பாபு. இவரது தினசரி பிசினஸ் ஒரு லட்ச ரூபாயைத் தாண்டிவிட்டது. ''இன்னும் ஓர் ஆண்டில் அனைத்து கிளைகளிலுமாக இருபத்தைந்து கோடி ரூபாய் அளவுக்கு பிசினஸை வளர்க்க வேண்டும்'' என்று கூறும் சரத்பாபுவுக்கு இந்த மாதக் கடைசியில் திருப்பதியில் திருமணம். சொந்தத்திலேயே பெண் பார்த்திருக்கிறார் சரத்பாபுவின் அம்மா.

**– கௌதம்ராம்**



*அம்மாவுடன் சரத்பாபு...

சங்கரன் ஷேவ் செய்து கொண் டிருந்தபோது, அவர் வீட்டுக்குள்ளே வந்தார்.

ஒரு ஹால், ஒரு சமையலறை என்ற சிறு போர்ஷன் என்பதால், சங்கரனுக்கு படிப்பது, படுப்பது, ஷேவ் செய்து கொள்வது, சாப்பிடுவது எனச் சகலமும் வீட்டின் ஹாலில்தான் நடக்கும்.

''வாங்க சார், உட்காருங்க. ஒரு அஞ்சு நிமிஷம்! இப்படி வெள்ளை க்ரீம் மூஞ்சியோட பார்த்துப் பயந்துடப் போறீங்க'' என்று வரவேற்றான்.

''என் பெயர் சிவக்கண்ணு...''

''தெரியும் சார். மாலாவோட கண வர். எல்.ஐ.சி.யிலே வேலை பார்க் கறீங்க. ஒரு நிமிடம்'' என்று பக்கவாட் டுக் கதவு வழியே வெளியே போனான் சங்கரன்.

வெளியே செல்லும் சங்கரனையே வெறித்தார் சிவக்கண்ணு.

மாநிறம் என்றாலும், களையாயிருந் தான் சங்கரன். யாரைக் கண்டாலும் மலரும் முகம். மாலா இவனைக் காதலித்ததில் தவறே இல்லை. சாதி சமாசாரத்தாலும் பெற்றோரின் தற் கொலை பயமுறுத்தலாலும், மாலா தன் காதலைத் தூக்கி எறிந்துவிட்டதாய்ச் சொன்னாள்.

ஆனால், அவளின் முன்னாள் காத லனே எதிர் வீட்டுக்குக் குடிவந்தது தற்செயலான செயல் என்றால், இந்தச் சங்கரன் வலிய வந்து மாலாவுக்கு உதவு வதை என்னவென்று எடுத்துக்கொள் வது?

திருமணமாகிப் பத்து வருடங்களாகி விட்டன சிவக்கண்ணுவுக்கும் மாலா வுக்கும். இவர்களின் தாம்பத்யத்தின் நிறைவாக இரு குழந்தைகளும் பிறந்து விட்டன. நீல வானமாகத் தெளிவாய் இருக்கும் இவர்கள் வாழ்க்கையில் கோடைகால மேகமாய், கோடை இடியாய், எதிர் வீட்டுக்குக் குடி வந்து விட்டான் சங்கரன். அதுவும் திருமணம் செய்துகொள்ளாத பிரம்மச்சாரியாக வேறு இருக்கிறான்.

மாலாவை மறக்க முடியாமல் இன் னமும் தவிக்கிறானா?

வெளியில் 'ஜென்டில்மேனா'கக் காட்டிக்கொண்டாலும், எல்லா கண வர்களுமே 'பொசசிவ்' குணம் உள்ளவர் கள்தான். தன் மனைவி தனக்கு மட் டுமே முழுமையாக உரிமையுள்ளவள் என்ற உணர்வு மேலோங்கி நிற்கும்.

# நேசிக்கிறேன்!

**கிருஷ்ணா**



இந்தக் குணம் சில சமயம் வரம். சில சமயம் சாபம்!

''மன்னிச்சுக்குங்க சிவா, தாமதம் பண்ணிட்டேன். சிவக்கண்ணுவை, சிவான்னு கூப்பிடலாமா, நான்? டீ சாப்பிடலாமா? ஒரே நிமிடம்'' என்று சமையலறைக்குள் ஓடினான்.

மழுமழுவென்ற அமுல் பேபி முகத்துடன், இளமை முறுக்கு விட்டுப் போகாத தோற்றத்துடன் இருக்கும் சங்கரனைக் கண்டு பொறாமைப்பட்டார் சிவக்கண்ணு.

முப்பத்தைந்து வயதிலேயே முன்பக்கம் வழுக்கை விழுந்து, செல்லத் தொந்தியுடன் இருக்கும் தன் உருவத்தின் மேல் கோபப்பட்டார்.

நேற்று மாலை இவனுடன் ஆட்டோவில் வந்து மாலா இறங்கியதுமே 'சுருக்'கென்றது. கூட இவர்களது பத்து வயது மகனும் மாலாவுடன் இறங்கியது மட்டும் ஆறுதலாயிருந்தது.

''டாக்டரைப் பார்த்துட்டு, டவுன் பஸ்சுக்காக நின்னுக்கிட்டிருந்தேன். சங்கரன்தான் வற்புறுத்தி ஆட்டோவிலே கூட்டிட்டு வந்துட்டார். மழை வேற வர்ற மாதிரி இருந்துச்சா, இவனுக்கு வேறு காய்ச்சல், 'சரி'ன்னு நானும் ஏறி வந்துட்டேன்'' என்றாள் மாலா.

அவள் பேச்சில் இயல்புத்தனம்தான் வெளிப்பட்டது.

போன வாரம் கரண்ட் பில் கட்டச் சென்ற மாலாவிடம், தானே அதை வாங்கிக்கொண்டு, அவளை அலையவிடாமல் தடுத்துவிட்டான்.

''என் வீட்டுக்குக் கட்டப் போறேன். தனியாய் உனக்காகவா அலையப் போறேன். கொடுன்னாரு சங்கர். சரி தானேன்னு கொடுத்துட்டேன். வெய்யில்ல அலையற வேலை மிச்சம்'' என்றாள் மாலா, அன்று.

ஆனால், சிவக்கண்ணுதான் மனதில் கற்பனையை



வளர்த்துக்கொண்டு நிம்மதியின்றி அலைந்தார்.

எதிரியின் காலில் விழுவதே சரி என்று சங்கரனைத் தேடி வந்துவிட்டார்.

''அசாம் ஸ்பெஷல் டீ சிவா'' என்று ஆவி பறக்க, டீ டம்ளருடன் வந்தான், சங்கரன்.

டீ நன்றாகவே இருந்தது.

''தனியாய்த்தான் இருக்கீங்களா?''

''ஆமாம் சிவா. கிராமத்தை விட்டு வர அம்மா, அப்பாவுக்கு மனசில்லே. யாரையும், எதற்குமே வற்புறுத்தறது எனக்குப் பிடிக்காது'' என்றான்.

திடீரென குடித்துக்கொண்டிருந்த டீ டம்ளரை அப்படியே வைத்துவிட்டு, அவசரமாய் வெளியே ஓடினான் சங்கரன்.

**"எங்க காதல் முறிஞ்சு போன பிறகு முடங்கிப் போனேன் நான்!"**



''என்னங்க நீங்க, சிசேரியன் டெலிவரி முடிஞ்சு மூணு மாசம்கூட ஆகலே, தண்ணிக் குடத்தை எடுத்துக்கிட்டு மாடிப் படி ஏறிப் போறீங்க. சார் இல்லையா வீட்டுல?''

''ஆபீஸ் வேலையா டூர் போயிருக்காரு'' என்றாள் மாடி போர்ஷன் பெண்மணி. கைக்குழந்தைக்காரி. வயதான மாமியார் இருக்கிறாள். அவள் கணவன் மார்க்கெட்டிங் ஆபீசராய் இருக்கிறான்.

''உங்க கூடப் பிறந்தவன்போல நினைசசுக்குங்க. எந்த உதவின்னாலும் கேளுங்க. சார் வந்ததும், நானே சொல்றேன்'' என்றான் சங்கரன்.

இரண்டு நிமிடங்கள் கழித்து வந்தான். தண்ணீர் சிதறி, அவன் சட்டையை நனைத்திருந்தது.

''சொல்லுங்க சிவா. சாரி, உங்களை காக்க வெச்சுட்டேன்'' என்றான்.

''நேற்று மாலை ஆட்டோவுலே எங்கோ போயிட்டு வந்தீங்க போலிருக்கே'' என்றார் சிவக்கண்ணு.

நேரிடையாக விஷயத்துக்கு வர முடியாமல், சுற்றி வளைத்துப் பேசினார்.

''ஆமாம் சிவா, நம்ம தெருக்கோடியில பெட்டிக்கடை வெச்சிருக்காரே வயதானவர் ஒருத்தர், அவர் திடீர்னு மயங்கி விழுந்துட்டாரு. சோடா குடிக்கலாம்னு யதேச்சையா அங்க போன நான் பதறிப் போயிட்டேன். உடனே, ஆட்டோவுல கூட்டிக்கிட்டுப் போயி, டாக்டரிடம் காண்பிச்சேன். அவர் வீடு நாலு தெரு தள்ளி இருக்கறதுனால, அதே ஆட்டோவுலயே அவரை வீட்டுல விட்டுட்டு, வரும் வழியிலேதான் மாலாவையும், பையனையும் பார்த்தேன். பத்து வயசுக்கு உங்க பையன் வெரி ஸ்மார்ட், தெரியுமா?'' என்றான் சங்கரன்.

சிவக்கண்ணு அவனை பிரமிப்புடன் பார்த்தார்.

''எல்லோருக்கும் ஓடி, ஓடி உதவறீங்களே?'' என்று கேட்டார்.

''ஆமா, என்னத்தை பெருசா செஞ்சுட்டேன். ஒவ்வொரு வயதிலும் நம்மிடம் ஒரு உணர்வு மேலோங்கி இருக்கும் சிவா.''

சிவக்கண்ணு புரியாமல் பார்த்தார்.

''சின்ன வயசுல விளையாடிக்கிட்டே இருக்கணும்னு தோணும், இருபது வயதிலே காதல்தான் பெரிதாய்த் தெரியும், அப்புறம் தன் குடும்பம், அப்புறம் காசு, பணம், அப்புறம் உதவற குணம், கடைசியாய் ஆன்மிகம், பக்தி.''

சங்கரன் சொன்ன வாழ்க்கைச் சக்கரத்தை உள்வாங்கி யோசித்தார் சிவக்

கண்ணு.

''எல்லோரையும் நேசிச்சு, உதவற குணம் கிட்டத்தட்ட அம்பது வயதிலே தான் வரணும் உங்க கூற்றுப்படி. ஆனால், உங்களுக்குப் பத்து, பதினைஞ்சு வருஷம் முன்னாடியே வந்துடுச்சு போலிருக்கே'' என்று கேட்டார்.

சங்கரன் புன்னகைத்தபடி சொன்னான்.

''எல்லாப் பெருமையும் என் அம்மாவுக்கே.''

''எப்படி?''

சங்கரன் சற்று யோசித்து, தயக்கம் விலகிப் பேசினான்.

''எங்க காதல் முறிஞ்சுபோன பிறகு முடங்கிப் போனேன் நான். சாப்பாடு இல்லை, தூக்கம் இல்லை, விளையாட்டு இல்லைன்னு அறைக்குள்ளயே தொலைத்த துக்கத்துடன் இருந்தேன்.''

மாலாவுக்கும், அவனுக்குமான காதல் தோல்வியைப் பற்றிச் சொல்வது புரிந்தது, சிவக்கண்ணுவுக்கு.

''அம்மாதான் தேற்றினாங்க என்னை. ஒருத்தரை நேசிச்சு, அது இல்லைன்றதுனாலதானே இவ்வளவு துக்கம் உனக்குள்ளே. அதே நேசத்தை உலகத்திலுள்ள எல்லார் மேலும் காண்பிக்கப் பழகு. எல்லோருக்கும் ஓடிப்போய் உதவி செய். துக்கமும் பறந்துடும், மனசும் விசாலமாகும்னு சொன்னாங்க. அம்மா சொன்னபடி முயற்சி பண்ணிக்கிட்டு வரேன். நிஜமான சந்தோஷத்தை மனசுல உணரவும் செய்யறேன். எல்லோரையும் நேசிக்க ஆரம்பிச்சதுனால திருமணம் முக்கியமாகப் படல.''

சங்கரன் பேசப்பேச, தன்னை இத்தனை நேரம் அலைக்கழித்த நினைவுகளை எண்ணி, சிறுத்துப் போய் அமர்ந்திருந்தார் சிவக்கண்ணு.

''அடேடே, நான்பாட்டுக்கு பேசிக்கிட்டே இருக்கேன். நீங்க எதுக்கு வந்தீங்க சிவா?''

''தனியா இருக்கீங்களே, மதியம் நம்ம வீட்டுல சாப்பிடலாம் வாங்கன்னு கூப்பிட வந்தேன். மறுக்காம வரணும், ப்ளீஸ்'' என்று அழைத்தார் சிவக்கண்ணு. ○



**த**ங்கரின் அடுத்த படைப்பான 'ஒன்பது ரூபாய் நோட்டு' தடபுடலாகத் தயாராகிவிட்டது. தமது நாவலையே இம்முறை திரைப்படமாக்கியிருக்கும் தங்கர், சத்யராஜ், அர்ச்சனாவை வைத்து உயிரோட்டமுள்ள ஒரு காவியத்தைப் படைத்திருப்பதாகச் சொல்கிறார்கள்.

● 1972ல் தொடங்கி 2004 வரையிலான காலகட்டத்தை படமாகப் பதிவு செய்திருக்கிறார் தங்கர். மூன்று தலைமுறைகளைப் பற்றின கதை. அந்தந்த காலகட்டங்களைப் பிரதிபலிக்கும் வகையில் காட்சிகளுக்கான பின்புலமும், பின்னணி இசையும் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன. கதை நிகழும் மூன்று பருவங்களுக்குப் பொருத்தமாக மூன்று கட்டங்களாகப் படப்பிடிப்பு நடத்தப்பட்டிருக்கிறது.

● கதை நாயகரான மாதவப் படையாச்சி கதாபாத்திரத்தை ஏற்றிருக்கும் சத்யராஜுக்கு, அவரது திரை வாழ்வில் இது முக்கியமான படம். முதல்முறையாக கோவணம் கட்டி நடித்திருப்பதோடு, ஐந்து விதமான தோற்றங்களில் வருகிறார்.

● மூன்று முறை தேசிய விருது பெற்ற அர்ச்சனா, மாதவப் படையாச்சியின் மனைவியாக வாழ்ந்திருக்கிறார். எடிட்டர் பி.லெனின் கடந்த பல வருடங்களாக படத்தொகுப்பு செய்வதில்லை என்று முடிவெடுத்து, அதுபடியே இருந்து வந்தார். இப்போது நீண்ட நாள் கழித்து 'ஒன்பது ரூபாய் நோட்டு' கதைக்காக மீண்டும் பணிபுரிந்துள்ளார்.

**- ரேவதி**



# தங்கமா இருந்தா போடவிடுவேனா?

**காட்சி 1 :** ஒரு கட்சியின் அலுவலக வாசல். அங்கே ஒரு பெண்ணுக்குக் கல்யா ணம். மணப்பெண் மாப்பிள்ளைக்காகக் காத் திருக்கிறாள். மாலை மூன்று மணிக்கு நடைபெற வேண்டிய திருமணத்துக்கு, ஐந்தரை மணிக்கு வந்து சேருகிறார் மாப் பிள்ளை. ஏதோ ஒரு போராட்டத்தில் கலந்துகொண்டதால் தாமதமாகியிருக் கிறது. மாப்பிள்ளையும் பெண்ணும் மாலை மாற்றிக்கொள்கிறார்கள். திரு மணத்துக்குப் பின் மாப்பிள்ளை கலந்து கொள்ள வேண்டிய போராட்டங்களின் நிகழ்ச்சி நிரலை ஒருவர் சொல்கிறார். பெண் மாப்பிள்ளையை நிமிர்ந்து பார்க்க, அடக்கமாகச் சிரிக்கிறார் மாப்பிள்ளை.

**காட்சி 2 :** அவர், வீட்டுத் தாழ்வாரத் தில் அமர்ந்து ஒரு புத்தகத்தை ஆழ்ந்து படித்துக் கொண்டிருக்கிறார். அவரருகே ஓடி வரும் மகள், ஆசை ஆசையாகத் தன் கழுத்தில் இருக்கும் தங்கச் சங்கிலியைக் காட்டுகிறாள். அதைப் பார்த்ததும், ''இது உனக்கு ஏது? யார் கொடுத்தது? இந்தத் தங்கம் மக்களை எப்படியெல்லாம் பாடாய்ப்படுத்துது தெரியுமா?'' என்று சொல்லிக்கொண்டே அந்தச் சிறுமியை விசிறியால் அடிக்கிறார். சமையலறை

✱ படக்காட்சி...

யிலிருந்து மனைவி ஓடி வருகிறார். ''ஏங்க! அது கவரிங். பக்கத்து வீட்டுப் பொண்ணு வாங்கிக் கொடுத் தாள். தங்கமா இருந்தா நான் அவளைப் போட்டுக்க விடு வேனா?'' என்று சொன்ன பிறகுதான் அவர் சமாதான மாகிறார்.

- மேலே சொன்ன இரண்டு காட்சிகளும் ஒரு தலை வரின் வாழ்க்கையில் உண்மையாக நடந்த சம்பவங்கள். அவர் பெயர் ஏ.கே.கோபாலன். 'ஏ.கே.ஜி'. என்று சகாக் களால் செல்லமாக அழைக் கப்படும் சுதந்திரப் போராட் டத் தியாகி. கிலாபத் இயக்கத்தில் பங்கேற் றவர். உப்புச் சத்தியாகிரகத்தில் கலந்து கொண்டு சிறைக்குப் போனவர். ஐந்து முறை நாடாளுமன்ற உறுப்பினராக இருந் தவர். கம்யூனிஸ்ட் கட்சியிலும், பிற்பாடு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிலும் பொறுப்புகள் பல வகித்தவர்.

சமீபத்தில், அவரைப் பற்றிய 'ஏ.கே.ஜி.' என்ற மலையாளப் படம் சென்னையில் திரையிடப்பட்டது. பாதி ஆவணப் பட மாகவும், பாதி திரைப்படமாகவும் எடுக்கப் பட்டிருக்கிறது இந்தப் படம். ஏ.கே.ஜி.யாக நடித்திருக்கும் ஸ்ரீகுமாரும், அவருடைய மனைவி சுசீலாவாக நடித்திருக்கும் அர்ச்சனாவும் படம் முடிந்த பிறகும் கண் முன்னே நிற்கிறார்கள். இப்படிப்பட்ட ஒரு படத்தைச் சிறப்பாக இயக்கியிருக்கும் ஷாஜி என்.கருணையும், தயாரித்த புரோக மனா கலா சாஹித்ய சங்கத்தின் மாவட்டக் குழுவையும் எவ்வளவு வேண்டுமானா லும் பாராட்டலாம்.

சினிமா, பொழுதுபோக்கா? ஆமெனில், பயனுள்ள பொழுதுபோக்காக மாற்ற முடியுமா? முடியுமென நிரூபித்திருக் கிறது 'ஏ.கே.ஜி.'

**பாலுசத்யா**

● க.மோ.சிவா, கிருஷ்ணகிரி

**மானத்தை எப்படி சார் கப்பலேத்த முடியும்...?**

கப்பலோட்டிய தமிழன் வ.உ.சி., வெள்ளைக்காரன் மானத்தைக் கப்ப லேற்றவில்லையா...?

● அ.யாழினி பார்வதம், கே.கே.நகர்

**இளமைப் பருவத்தில் தங்கள் நிக் நேம் என்ன..?**

'மொட்டை' மோகன். மீசை வைத்தால் 'மகாகவி பாரதி' ஆகலாம்; தாடி வைத்தால் 'தாகூர்' ஆகலாம் என்று இளமையில் பலர் ஆர்வக் கோளாறுக்கு ஆளாவதுண்டு. நானும் அதுபோல நகைச்சுவையில் 'சோ' ஆகலாம் என்ற அல்ப ஆசையில், இளமை யில் அடிக்கடி மொட்டை அடித்துக்கொள் வேன். 'சோ' ஆக முடியாது என்பது தெரிந் தவுடன், 'ச்சீ ச்சீ இந்த மொட்டை வழுக் கும் (சிரசாசனத்தின் போது)' என்று மொட் டைக்கு முழுக்குப் போட்டேன். என் தலையெழுத்து மொட்டை போச்சு சொட்டை வந்தது டும் டும் டும் டும்!

# கிரேஸியைக் கேளுங்கள்



● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி

**'பிரஸ்டீஜ்' பார்ப்பவர்களைக் காணும் போது என்ன நினைப்பீர்கள்?**

வறட்டு கெளரவம் என்னும் 'பிரஸ்டீ ஜால்' கு(கொ)தித்து, தேவையில்லாமல் ப்ளட் பிரஷரை தூக்கி விட்டுக்கொள்ளும் பரி தாபகரமான பிரஷர் குக்கர்கள்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**நாடகம் பார்க்க வந்தவரை, நடிக்க வைத்த அனுபவம் உண்டா?**

நான் நாடகம் எழுதும் சமயத்தில் எதுவும் தோன்றாமல் முழி பிதுங்கும்போது, அந்த அவஸ்தையைச் சமாளிக்க பாரதக்குட்டாக 'ஓம் வினாயகாய நமஹ; கற்பகாம்பாள் துணை' எழுதிய

படி தடங்கலுக்கு நான் வருந்துவது வழக்கம். அதனால் நான் எழுதும் நாடகங்களில் வசனத்தைவிட 'ஓம் வினாயகாய நமஹ; கற்பகாம்பாள் துணை'தான் அதிகமாக இருக்கும். நிற்க.



என்னைவிட என் நாடகங்களை அதிகமாக பார்த்த ரசிகர் ஒருவர் இருக்கிறார். ஒருமுறை அந்த ரசிகரும் ஆசைப் பட்டார்; நானும் அடுத்த டிராமாவுக்கு சீனு ரோலுக்கு ஆள் இல்லாமல் திண்டாடிக் கொண்டிருந்தேன். அவசர அவசரமாக

# 20:20 கிரிக்கெட் விளையாடுவீங்களா?

கையில் அகப்பட்ட எனது கையெழுத்துப் பிரதியை அந்த ரகசிய ரசிகனிடம் கொடுத்து, மனப்பாடம் போட்டுகொண்டு வரச் சொன்னேன். ரசிகர் மேடை ஏறினார். கதாநாயகன் மாதுவைப் பார்த்து 'மாது, உன்னோட லவ்வர் ஜானகி 'ஓம் விநாயகாய நமஹ' சொல்லிட்டா. நம்ம காதலுக்கு எந்தத் தடை வந்தாலும் சமாளிக்க எங் கம்மா கற்பகாம்பாள் துணை இருக்கேன்னு வாக்குறுதி கொடுத்துட்டா' என்று பேசி, மாது-ஜானகி காதலை தெய்வீகக் காதலாக்கினார்!

● **நீ.முத்துக்குமார், திருச்சி**

***20 : 20 கிரிக்கெட் விளையாட கூப்பிட்டால் போவீர்களா?***

இப்ப என்ன அவசரம்? ஐந்து நாள் விளையாட்டு 50:50 ஆகி, இப்ப 20:20 ஆகியிருக்கு. இந்தக் கழுதை 10:10, 5:5 என்று தொடர்ந்து தேய்ந்து கட்டெறும்பாகும். அதற்கு



அடுத்த கட்டமாக, ஒரு டீமுக்கு 11 பேருக்குப் பதிலாக 5 பேர் போதும், 2 பேர் போதும் என்று சுருங்கி, ஒண்டிக்கு ஒண்டியாக மாறும் வாய்ப்பு உண்டு. அப்பால, 'எதுக்கு அனாவசியமா மேட்ச? பேசாம டாஸ்ல எவன் ஜெயிக்கிறானோ, அவனுக்குத்தான் உலகக் கோப்பை' என்னும் ரூல் வரும். இப்படி விளையாட்டு வினையில் முடியும் நேரத்தில் நான் விளையாடப் போவேன். டாஸில் நான் எப்போதுமே ஜெயிப்பேன். என் நாணயத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு!

● **அமிர்தா, நாகப்பட்டினம்**

***அடுத்த ஜென்மத்தில் என்னவாகப் பிறக்க ஆசைப்படுகிறீர்கள்?***

இந்த ஜென்மத்தைப் போல குழந்தையாக!

● **எஸ்.கே.வாலி, துறையூர்**

***துன்பம் வரும்போது சிரிக்க முடியுமா?***

துன்பம் என்பது நோய். சிரிப்பு ஆரோக்கியம். நோய் வரும் முன் சிரிப்போம்.

● **கே.எஸ்.நாராயணன், கே.கே.நகர்**

***பெண் பாவம் பொல்லாதது. அப்படியானால் ஆண் பாவம்...?***

ஆண் பாவம் செல்லாதது. நளனும் அரிச்சந்திரனும் இறுதிவரையில் நாய் படாத பாடுபட்டார்கள். இவர்கள் கதை, கடைசி கடைசியாக க்ளைமாக்ஸில், அதுவும் தமயந்தி, சந்திரமதி 'மனம்போல மாங்கல்யத்தால்' சுபமாக முடிந்தது. ஆண் பாவம் என்பதைவிட, பாவம் ஆண் என்பதே சரியென்று தோன்றுகிறது. ●

இதய நோய், சர்க்கரை பாதிப்பு, இரத்தக் கொதிப்பு என்று தன்னோடு பல தொல்லைகளைக் கொடுக்கும் உடல் பருமன், இன்று பலரின் தீர்க்க முடியாத பிரச்னையாக இருக்கிறது.

''தோலுக்கடியில் அளவுக்கு அதிகமாகச் சேர்ந்திருக்கும் கொழுப்புச் சத்துதான் உடம்பை பருமனாகக் காட்டுகிறது. இந்தியாவில் மட்டும் 2.5 மில்லியன் மக்கள் இந்த உடல் பருமன் பிரச்னையால் அவஸ்தைக்கு உள்ளாகிறார்கள்'' என்கிறார் சென்னை அமைந்தகரை ஆல்சென்டர் மருத்துவ நிறுவனத்தின் இயக்குநரும், இரைப்பை அறுவை சிகிச்சை நிபுணருமான டாக்டர் சுரேஷ். தொடர்ந்து, உடல் பருமனுக்கான காரணங்களையும் இப்பிரச்னைக்கான தீர்வு குறித்தும் நம்மிடம் பேசினார்...

''அதிக எடைக்குப் பல காரணங்கள் உண்டு. பாரம்பரியம், அதிகமான மாத்திரைகள் சாப்பிடுவது, உடல் உழைப்பின்மை, நவீன உணவுகள், உடற்பயிற்சியின்மை எனச் சொல்லிக்கொண்டே போகலாம்.



✱ டாக்டர் சுரேஷ்

அடிப்படையான கேள்வி ஒன்று எல்லோரிடமும் இருக்கிறது. 'கொஞ்சமாத்தான் சாப்பிடறேன். ஆனாலும் எடை கூடிக்கிட்டே போகுது' என்பது அடிக்கடி சந்திக்கும் கேள்வி. உடல் பருமன் உள்ளவர்களுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசம் இங்கேதான் இருக்கிறது. உடல் பருமன் உள்ளவர்கள் எடுத்துக் கொள்ளும் உணவு, பெரும்பாலும் கொழுப்புச் சத்தாக மாறிவிடுகிறது. இதற்குச் சரியான தீர்வு கொழுப்பு இல்லாத சமச்சீரான உணவு எடுத்துக்கொள்வதுதான். ஒரே இடத்தில் அமர்ந்து வேலை பார்ப்பவர்கள் உடற்பயிற்சி செய்தாலே போதும். இந்தத் தொல்லையிலிருந்து தப்பித்துக்கொள்ளலாம்.

இன்று கிடைக்கும் ஃபாஸ்ட் ஃபுட், பாக்கெட்டுகளில் வரும் நொறுக்குத் தீனிகள் எல்லாமே உடல் பருமனை வலியச் சென்று அழைப்பவை. இதனைத் தவிர்ப்பது இன்றைக்கு மிக அவசியமான விஷயமாக இருக்கிறது.

முன்பெல்லாம் வீட்டு வேலை என்பது பெண்களுக்கு உடற்பயிற்சி. இன்று நவீன சாதனங்கள் வந்துவிட்டதால், அவர்களுக்கு அதிகமாக ஓய்வு கிடைக்க, இதுவே உடல் பருமனுக்கு வழிகோலி, ஆரோக்கியமின்மையை அழைத்து வந்து விடுகிறது.

ஒருவரது எடை 250 கிலோவுக்கு மேல் இருந்தால் அதனை மார்பிட் ஒபிஸிடி என்கிறோம்.

# உடல் பருமன்



இவர்களுக்கு 25 வயதிலேயே சர்க்கரை நோய், மூச்சுத் திணறல், இருதய நோய் எல்லாம் வந்து விடும் அபாயம் இருக்கிறது. இவர்களுக்கான நவீன அறுவை சிகிச்சை முறைகள் இன்றைக்கு நடைமுறைக்கு வந்துவிட்டன. இரைப்பை அளவினைக் குறைக்கும் போது, உணவு உட்கொள்ளும் அளவும் குறைகிறது. இதனால் எடை அதிகரிக்கும் வாய்ப்புக் குறைவு. உடம்புக்கு வேண்டிய சத்துக்களை மருத்துவர்கள் தரும் வைட்டமின்கள் மூலம் பெற்றுக்கொள்ளலாம்.

அதேநேரத்தில் பருமனாக உள்ள எல்லோருக்குமே அறுவை சிகிச்சை

தான் தீர்வு என்பது இல்லை. அதீத பருமன் ஏற்படுகிறபோது மட்டுமே இது குறித்து யோசிக்க வேண்டியுள்ளது. பக்கவிளைவுகள் குறித்தும் பின் விளைவுகள் குறித்தும் மருத்துவரிடம் கேட்டுத் தெளிவு பெற வேண்டும். சத்தான உணவு, உடற்பயிற்சி, ஆரோக்கியமான மனநிலை என்று நம் வாழ்க்கைச் சூழலை மாற்றியமைத்துக் கொண் டாலே உடல் பருமனைக் கட்டுக்குள் கொண்டு வந்து விடலாம்.

கொழுப்புச் சத்தில்லாத புரதச்சத்து, நார்ச்சத்து உள்ள உணவு வகைகளை எடுத்துக்கொள்வது எப் போதுமே நல்லது. சாலட், பழங்கள் போன்ற வற்றில் 70 முதல் 80 கிராம் வரை புரதச்சத்து இருக்கிறது. அரிசியைக் குறைத்துக்கொள்வது மிகமிக நல்லது. நார்ச்சத்து, உடம்பில் உள்ள எண் ணெயை நீக்கி மலச்சிக்கல் வராமலும் தடுக் கிறது.

இதுபோக ஒரு நாளைக்கு அரை மணி நேர நடைப் பயிற்சி, ஜாகிங் போன் றவற்றைத் தொடர்ந்து செய்ய வேண்டும்; யோகாவும் நல்லது.

இவற்றாலெல்லாம் எடை குறைகிறதா என்று ஒரு வருடம்வரை பார்க்கலாம். அப்படி

# ஏன்?



"ஒரே இடத்தில் அமர்ந்து வேலை செய்பவர்கள் உடற்பயிற்சி செய்தால் உடல் பருமனிலிருந்து தப்பலாம்!"

யும் குறையவில்லை என்றால் மட்டுமே அடுத்த கட்டமாக அறுவை சிகிச்சை செய்துகொள்ளலாம்.

உடல் பருமன் அறுவை சிகிச்சை என்பது இன்றைக்கு அமெரிக்காவில் மிக சகஜமாக செய் யப்படும் ஒன்று. இப்போது இங்கேயும் நிறைய பேர் செய்துகொள்கிறார்கள். லேபராஸ்கோபிக் மூலமாக இந்தச் சிகிச்சை மேற்கொள்ளப்படு கிறது. அறுவை சிகிச்சைக்கான அவசியமே இல் லாமல் பார்த்துக் கொள்வதுதான் ஆரோக்கிய மானது'' என்கிறார் டாக்டர் சுரேஷ்.

- ஜா.தீபா

# பூரண சந்திரனாக ஒளிர்பவள் 8

ஆதி சங்கரர், பரமேசுவரன் அவனி ரதத்தில் புறப்பட்ட சம்பவத்தைப் பாடுகிறார் : 'அம்மா, பெரிய தேரிலே ஒருத்தர் புறப்பட்டார்; சாதாரண ரதமில்லை; அவனி ரதத்தில் ஏறிப் புறப்பட்டார்! உலகத்தையே ரதமாக மாற்றிக்கொண்டார்! உலகம் தேராக மாறிப்போயிற்று என்றால் அதற்கு இரண்டு சக்கரங்கள் வேண்டுமே! அர்க்கேந்து சக்கரம் - என்று அர்க்கனாகிய சூரியன் ஒரு சக்கரமாக இருக்க, இந்துவாகிய சந்திரன் மற்றொரு சக்கரமாக இருக்க, அவனி ரதத்தில் புறப்பட்டார். 'ஆனால் அப்படிப் புறப்பட்டவர், ஒன்றுமே இல்லை என்று ஆகிவிட்டார்! என்ன காரணம் தெரியுமா...? நீ அளித்த தைரியம் காரணமாக மலயமாருத ரதத்தில் புறப்பட்ட மன்மதனாக இருக்கக்கூடியவன் ஜெயித்துவிட்டான்; பரமேசுவரன் ஜெயிக்கவில்லை' என்று வேடிக்கையாகப் பாடுவார்.

அவனி ரதத்தில் புறப்பட்ட பரமேசுவரனின் தேர் அச்சு முறிந்துபோயிற்று - அப்படி முறிந்துபோன இடம்தான் அச்சிறுபாக்கம் (அச்சு - இறு - பாக்கம்) என்று கணக்கு.

போகிற வழியில் விநாயகரை வழிபடாததால் அச்சு முறிந்து போயிற்று என்பது புராணம்.

### திரிபுரை

இந்த அவனி ரதத்தில் ஏறிப்போய் முப்புரங்களையும் எரித்ததால் - திரிபுர தகனம் செய்ததால் - அவருக்குத் திரிபுரன், திரிபுராரி என்று பெயர். அந்த திரிபுரசுந்தரரின் பட்டமகிஷியாக இருப்பதால் அம்பாளுக்கு திரிபுரசுந்தரி என்று பெயர். ஆனால், அது மட்டும் கணக்கல்ல, மும்மூன்றாக இருக்கக் கூடியவை எவை எவையெல்லாம் உள்ளனவோ, அவற்றுக்கெல்லாம் திரிபுரங்கள் என்று பெயர்.

குணம் என்று எடுத்துக்கொண்டால், ஸத்வ, தாமஸ, ராஜஸ குணங்கள் - இந்த மூன்று குணங்களின் ஸ்வரூபமாகவும் இருக்கக்கூடியவள் திரிபுரை.

சாதாரணமாக திரோபாவத்தையும் அனுக்கிரஹத்தையும் கொஞ்சம் ஒதுக்கி வைத்துவிட்டு இறைவனின் தொழில்களை முத்தொழில்கள் - ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் - என்றே கொள்வது வழக்கம். இந்த மூன்றையும் அவற்றுக்குள்ளே இருந்து கொண்டு நடத்தக் கூடியவள் அம்பாள் - எனவே திரிபுரையாக இருக்கக்கூடியவள்.

சூரியன், சந்திரன், அக்னி என்று அம்பாளுக்கு மூன்று கண்கள், முக்கண்ணி - திரிநயனாம்..! நெற்றிக்கண் உட்பட இந்த மூன்று கண்களை உடையவள் என்பதாலும் திரிபுரை; மூன்று கண்களாக விளங்கும் சந்திரன், சூரியன், அக்னி ஆகியவற்றுக்குள் உறைபவள் என்பதாலும் திரிபுரை.

இதை இப்படியே அடுத்தடுத்த நிலைகளில் பொருத்திப் பார்த்துக்கொண்டே போனால், யோக சாஸ்திரத்தில் உள்ள நாடிகள் மூன்று - இடா, பிங்கலை, சுசும்னா என்று... - இந்த மூன்றுக்குள்ளே திரிபுரையாக இருக்கக் கூடியவள். எனவே மஹாதிரிபுரசுந்தரியாக இருக்கிறாள்.

எதெதெல்லாம் மும்மூன்றாக இருக்கின்றதோ, அவற்றுக்குள்ளெல்லாம் த்ரய ஸ்வரூபிணியாக இருக்கக்கூடியவள். எனவே மஹாத்ரிபுரசுந்தரி.



- சதுஷ்ஷஷ்டி உபசாராட்யா அறுபத்து நான்கு கலைகளினுடைய ஆதாரமாக இருக்கிறாள் - சதுஷ்ஷஷ்டி கலாமயி.

இதற்கப்புறம்தான் மிக முக்கியமான ஒரு திருநாமம் - நாம் ஏற்கெனவே பாஸ்கர ராயரோடு சேர்த்துப் பார்த்த திருநாமம் - **சதுஷ்ஷஷ்டிகோடி யோகினி கண ஸேவிதா.** - அறுபத்து நான்கு கோடி யோகினிகளால் துதிக்கப்படுபவள்.

**மனு வித்யா** - இதற்குச் சாதாரணமான வியாக்யானம் என்னவென்றால் மனுவினுடைய வித்யைக்கு ஆதாரமாக இருக்கிறவள்.

பன்னிரண்டு பேர் அம்பாளுடைய மிகப் பெரிய பக்தர்கள். அவர்களுள் முதல் பக்தர் மனு. அவருடைய பெயர்தான் முதலில் வருகிறது. மிகப்பெரிய அம்பாள் உபாஸகர் அவர். அதனால் **மனு வித்யா** அவருடைய வித்யையின் ஆதாரமாக இருக்கக்கூடியவள்.

**இந்த பூலோகத்தில் உள்ளவர்கள் உய்வதற்காக பார்வதியாக அவள் வந்ததே மிகவும் உயர்ந்தது.**

இந்த மஹாதிரிபுரசுந்தரி என்பதற்கு, பின்னால் வரக் கூடிய இன்னொரு திருநாமத்தைப் பொருத்திப் பார்க்க முடியும்.

254ஆவது திருநாமம் ஒன்று உண்டு: தியான தியாத்ரு த்யேய ரூபா - இதற்கு என்ன அர்த்தம்...?

ஒருத்தர் தியானம் பண்ணுகிறார் என்றால், அப்படிச் செய்யக்கூடிய செயலில், தியானம் செய்பவர் - தியாத்ரு - தியானமாகிற கர்மாவைச் செய்பவர்.

அவர் எதன் மீது தியானிக்கிறாரோ அது தேயம் - அம்பாள் மீது தியானிக்கிறார் என்று சொன்னால் அம்பாள் அந்த இடத்தில் தேயம்.

செய்யக்கூடியவர், செய்கிற செயல் (அதாவது அவருடைய தியான முயற்சி), மற்றும் எதை நோக்கிச் செய்கிறாரோ அது என்ற மூன்றுமாக இருக்கக்கூடிய ஒரே அம்சம் அம்பாள்தான் என்பதையே **மஹாதிரிபுரசுந்தரி** என்கிற திருநாமம் குறிக்கிறது.

### கலை வடிவினள்

அப்படி மஹாதிரிபுரசுந்தரியாக இருக்கக் கூடியவள் அறுபத்துநான்கு உபசாரங்களினால் ஆராதிக்கப்படக்கூடியவள்

இதையே இன்னும் கொஞ்சம் வித்தியாசமாகப் பார்க்கலாம். மனு என்று சொன்னாலே மனிதர்களுக்குத் தலைவன் அதனால்தான் 'மன்வந்த்ரம்' என்று பெயர் வந்தது - மானுடத்தின் தலைவன் - பிரதிநிதி என்பதாக.

மனுவித்யா என்று சொல்கிறபோது மனிதர்களாகிய நாம் உணர்ந்து கொண்டிருக்கக்கூடிய வித்யை - புரிந்து கொண்டிருக்கக்கூடிய வித்யை - எதுவானாலும் அதன் ஆதாரமாக இருக்கக்கூடியவள்.

**சந்திர வித்யா** - இந்தப் பன்னிரண்டு உபாசகர்களுள் அடுத்தவர் யார் என்றால், இரண்டாவது நிலையில் இருக்கும் சந்திரன். எனவே, சந்திரனுடைய வித்யையின் ஆதாரமாக இருக்கக்கூடியவள்.

**சந்திர மண்டல மத்யகா** - சந்திர மண்டலத்துக்கு நடுவிலே இருக்கக்கூடியவள். சந்திரமண்டலத்துக்கு நடுவே என்றால்,

எந்த அப்போலோ மிஷனில் போய் சந்திர மண்டலத்துக்கு நடுவே இறங்கினாள்?

- இப்படிக் கேட்கத் தோன்றும். ஆனால், இது கொஞ்சம் ரகசியமான பொருள் பொதிந்தது : சஹஸ்ரார பத்மத் தின் மேலே, சந்திரனாக இருந்து அமுத கிரணங்களைப் பொழியக் கூடியவள் அம்பாள் என்று இதற்குப் பொருள். 'சந்திர மண்டலம்' என்று யோக சாஸ்திரம் எதைக் குறிக்கும் என்றால், சஹஸ்ரார கமலத்துக்கு மேலே இருக்கக்கூடிய பிரகாசமான பிர தேசம். அம்பாள் அங்கே இருந்தால்தான் அந்த அமுத கிரணமே பொழியும்.

### நிலவின் அழகும் தண்மையும்

**சாரு ரூபா** - அழகின் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்.

**சாருஹாஸா** - அழகான புன்சிரிப்பைக் கொண்டவள்.

**சாருசந்திர கலாதரா** - வளர்வது, தேய்வது என்பது சாதாரண சந்திரனுக்குரிய குணங்கள். சாருசந்திரன் என்றால், வளர்ச் சியோ, தேய்மானமோ இல்லாத சந்திரன். எப்போதும் பூரணமாக இருக்கக்கூடிய சந்திரன். பக்தர்களுக்கு எப்போதுமே தனது ஒளியைப் பூரணமாகத் தந்துகொண் டிருப்பவள் அம்பாள்.

**சராசர ஜகந்நாதா** - இந்த சராசரம் - தாவர - ஜங்கமம் - அனைத்துக்கும் ஆதார மானவள். 'தாவர - ஜங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்று பாடினார் மாணிக்கவாசகர்.

ஒரு காலத்தில், நீதிமன்ற ஆவணங் களில் சொத்து விவரங்களை எழுதுகிற போது தாவரச் சொத்து, ஜங்கமச் சொத்து என்று எழுதுவார்கள். ஜங்கமம் - இடம் பெயரக்கூடியது (அசையும் சொத்து). தாவரம் என்பது இடம் பெயராது. (அசையா சொத்து)

அசையக் கூடியது, அசையாதது என்று எல்லாமாக இருக்கக்கூடிய இந்த சரா சரத்தின் தலைவியாக - ஜகத்தின் தலைவி யாக - இருக்கிறாள் அம்பாள்.

**சக்ர ராஜ நிகேதனா** - அவளுடைய ரதத்துக்கே சக்ர ராஜ ரதம் என்றுதான் பெயர். சக்ரராஜம் என்னும் வீட்டுக்குள்ளே இருக்கக்கூடியவள். சக்ரராஜத்தைத் தனது நிலையமாகக் கொண்டவள் அம்பாள்.

### சங்கரர் நேசித்த நாமம்

**பார்வதி** - ஆதி சங்கரர் மீண்டும் மீண்டும் எதைச் சொல்கிறார் என்றால், 'ஹிமவானுடைய மகளாக இருக்கக்கூடிய வளே' என்பார். ஏதாவது ஒரு வகையில் 'பார்வதி' என்கிற இந்தத் திருநாமத்தைச் சொல்லுவார். 'பனிபடர்ந்த மலையினு டைய மகளே!' என்பார். இல்லையென் றால், 'ஹிமவான் மகளே' என்பார். அவருக்கு மிகவும் பிடித்தது, அம்பாள் ஹிமவான் மகளாக அவதரித்ததுதான்.

நியாயமாகப் பார்த்தால் ஸௌந்தர்ய லஹரியிலே முழுக்க, முழுக்க, முழுக்க லலிதாம்பிகையைத்தான் பாடுகிறார்; திரி புரசுந்தரியைத்தான் பாடுகிறார். ஆனால், அந்தப் பெயர்களைக் குறிப்பிடாமல், 'ஹிமவான் மகளே! ஹிமவான் மகளே!' என்பார். என்ன காரணம் என்றால், பர்வத ராஜன் மகளாக அவதாரம் செய்தாளே, அப்படித் திருவவதாரம் செய்து, இந்தப் பூலோகத்திலே இருப்பவர்கள் உய்வதற் காக அவள் வந்ததுதான் மிகவும் உயர்ந்தது என்று அர்த்தம்.

பார்வதி - பர்வதராஜனுடைய திருக்குமாரத்தியாக இருக்கக்கூடியவள்.

**(வளரும்)**

"ஹிமவான் மகளே ஹிமவான் மகளே" என்பார்...





# வருத்தம் தந்த நிறுத்தம்!

சபாஷ் ப்ரியாமணி! உங்களின் தைரிய சவால் பேட்டி சூப்பர்ப்!

**- எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை**

'பிம்பங்களின் உலகம்' கவிதை நறுக்... சுருக்!

**- பா.அச்சுதன், வயலூர்**

இந்திய அரசை உரிய காலத்தில் எச்சரித்திருக்கும் தலையங்கம் அருமை.

**- என்.சீதாலட்சுமி, பொள்ளாச்சி**

'கடமையைச் செய்; பலனை எதிர்பார்க்காதே என்று கீதை காட்டுவது மிக உயர்ந்த இலக்கு' என்ற ஆசிரியரின் வரிகள் வைரம்!

**- ம.விஸ்வநாதன், ஜமுனாமரத்தூர்**

யானையான காங்கிரஸ் சுண்டெலியான தி.மு.க.வைக் கண்டா பயப்படும்? யானை பின்வாங்குகிறது, அவ்வளவுதான். தன்னை நிலைப்படுத்திய பின்தான் யானையின் வேகத்தைப் பார்க்க வேண்டும்!

**- பி.தேவி, பாபநாசம்**

கண்ணகி சிலையில் கண்ணும் கருத்துமாய் இருந்தவர்க்கு, சிலப்பதிகாரத்திலிருந்தே இராமர் இருக்கிறார் என்ற ஆதாரத்தைக் காட்டியுள்ள ஆராவமுதன் பாராட்டப்பட வேண்டியவர்.

**- சுலோசனா சம்பத், திருவரங்கம்**

'தித்திக்கும் திங்கள்' பகுதி வாயிலாக வாசகர்களை கௌரவித்த கல்கி, திடீரென அப்பகுதியை நிறுத்தியது வருத்தம் அளிக்கிறது. என்றாலும் வாசகர்கள் கூறிய யோசனைகள் படிப்படியாக நிறைவேற்றப்படும் என்ற செய்தி சந்தோஷம் தந்தது.

**- ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர்**

நிமிடக் கதைகள் போல நறுக்கென்று இருந்தன மூன்று சினிமா விமர்சனங்களும். **- அகரம் கா.சங்கர்**




## ஸ்பீட் போஸ்ட்

கே.எஸ்.ரவிக்குமாருக்கு மட்டுமல்ல, தமிழ் சினிமாவுக்கே கமல் காட்ஃபாதர் தான்!

**- அ.யாழினி பர்வதம், சென்னை**

நிலநடுக்கத்தை நமது பாராளுமன்றம் தாங்குவது இருக்கட்டும், பாராளுமன்றத்துக்குள் நமது பிரதிநிதிகள் செய்யும் அமளிகளால் நடுங்கிக்கொண்டிருக்கும் பாராளுமன்றத்தின் நடுக்கத்தை முதலில் நமது அரசியல் மேதைகள் நிறுத்தட்டும்!

**- எஸ். கோபாலன் நங்கநல்லூர்**



# ஸ்ரீகாஞ்சி மஹாஸ்வாமி பக்தர்களுக்கு ஒரு வேண்டுகோள்



மகான்களும் மகனீயர்களும் இந்தியாவில் மாண்ட சமுதாயம் சகல நற்குணங்களும் அமையப்பெற்று, தகுந்த பரிணாம வளர்ச்சியடைய, ஒற்றுமையுடன் நல்லவழியில் வாழ்ந்து கடைசியில், மூலாதாரத்தை அடைய வழிவகுத்து தந்துள்ளனர். வருங்காலத்தில் சரித்திரம் பேசும் அளவிற்கு வரும் சந்ததியினர் கிரகிக்கும் அளவிற்கு இம்மையில் எல்லா நலன்களும் பெ ச் செய்வது நமது இன்றைய கடமை. இந்த மகான்களின் பரம்பரையில் வந்தவர்தான் காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்த 68வது பீடாதிபதி ஸ்ரீசந்திரசேகரேந்திர மஹாஸ்வாமி அவர்கள் பக்தர்கள் ஆதரவுடன் அழைக்கப்படும் "பரமாச்சாரியார்".

அந்த ஜகத்குருவை வருங்கால சந்ததியினர் நினைவு கூறும் வகையில் ஸ்ரீசங்கர பக்த ஜன சபா டிரஸ்ட் மேற்கூறிய மகானின் உயர் குறிக்கோள்களையும் கோட்பாடுகளையும் கொண்டு ஒரு மனதே வாழும் வகையில் ஸ்ரீமஹாஸ்வாமி, காஞ்சி காமகோடி பீடம் ஆச்சார்யார்களின் அனுக்கிரகத்துடன் 'மஹாஸ்வாமி நினைவு மண்டபத்தை' நிறுவி, அதில் ஸ்ரீமஹாஸ்வாமியின் நூறு ஆண்டுகள் வாழ்ந்த காலத்தில் எடுத்த கிடைத்தற்கரிய படங்களை ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் பார்க்கத்தக்க வகையில் வைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதில் அவர் கடைசியாக உபயோகப்படுத்திய ஒரு சில பொருட்களும் இடம் பெறும். இம்மண்டபம் ஸ்ரீமஹா பெரியவாள் தன் வாழ்நாளில் அதிக நாட்கள் வாழ்ந்த காஞ்சீபுரத்தில் ஸ்ரீபரமாச்சாரியார் நினைவாக நிறுவப்பட உள்ளது. இதற்கான செலவு தோராயமாக ரூ.60 லட்சத்திலிருந்து ரூ.70 லட்சம் வரை ஆகலாம். மண்டபம் நிறுவப்பட உள்ள நில அளவை 3000 சதுரடி. மண்டபம் மட்டும் 4000 சதுர அடியில் நிறுவப்படும். இது ஸ்ரீமஹாஸ்வாமிகளின் பக்த கோடிகளின் உன்னதமான நன்கொடைகளைக் கொண்டுதான் நிறைவுறும்.

ஸ்ரீமஹாஸ்வாமி பக்தர்கள் அனைவரும் தங்கள் காணிக்கைகளை காசோலை மூலமாகவோ (by Cheque) அல்லது வரைவு காசோலை மூலமாகவோ (by Demand Draft) - Payable at Chennai) - **SRI SANKARA BHAKTHA JANA SABHA TRUST** என்ற பெயருக்கு, கீழ்க்கண்டுள்ள எங்கள் சென்னை விலாசத்திற்கு அனுப்ப வேண்டுகிறோம். இந்த நன்கொடைகளுக்கு வருமானவரி 80G பிரிவின் கீழ் வரிவிலக்கு உண்டு.

**SRI SHANKARA BHAKTA JANA SABHA TRUST**

New No.70 (Old 199-A), St. Mary's Road,
Abhiramapuram, Chennai – 600 018. Ph : 2499 6823

பூமி பூஜை 23.08.2007 அன்று மதியம் 2.30 மணி அளவில் 91, சாலைத்தெரு, காஞ்சீபுரத்தில் நடந்து. தொடர்ந்து கட்டிட வேலைகள் நடைபெற்று வருகின்றது

---

ஸ்ரீ :

## விழாக்காலம் நெருங்கிவிட்டது

தீப ஆவளி (தீபாவளி), கார்த்திகை தீபத் திருநாட்களில் வைணவத் தமிழ் இலக்கிய நூல்களை வாங்கி ஆதரிக்கும் அன்பர்களுக்கு

## ஸ்ரீ விஷ்ணு சித்த ஸ்ரீ

தனது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவிக்கும் வேளையில் தங்கள் உறவினர், நண்பர்கட்கு கீழ்க்கண்ட நூல்களை, தீபாவளி, கார்த்திகைப் பண்டிகைகளை கொண்டாடும் வகையில் பரிசளித்துப் பயன் பெறலாம் என்று பணிவுடன் வேண்டுகிறது.

### நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணனைன்

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் உள்ள ஆயிரம் நாமங்களுக்குப் பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எழுதப்பட்ட எளிய தமிழ் உரைநூல்-1600 பக்கங்கள்-5 பாகங்கள்-ரூ.600/- தபால் செலவு ரூ.30/-).

### அல்லி மாமலர் மங்கை - ஸ்ரீலக்ஷ்மீ

ஜகன்மாதா ஸ்ரீ மஹாலக்ஷ்மியைப் பற்றி இன்று உலகில் வழங்கும் ஏறத்தாழ எல்லா ஸ்தோத்ர, மந்த்ர, ஸூக்தங்களுக்கும் மூலத்துடன் பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எழுதப்பட்ட எளிய தமிழ் உரைநூல் 1200 பக்கங்கள் - 3 பாகங்கள் - ரூ. 500/- (தபால் செலவு ரூ. 30/-).

### பூமாலை சூடிக்கொடுத்தவள் பாமாலை

ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகியவற்றுக்குப் பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எழுதப்பட்ட எளிய தமிழ் உரைநூல் - 900 பக்கங்கள் - 3 பாகங்கள் - ரூ. 400/- (தபால் செலவு ரூ. 30/-).

மூன்று நூல்களுக்கும் ஆசிரியர் : பழவேரி சக்ரவர்த்தி ராகவஸிம்ஹாசார்யர்

விழாக்காலச்சலுகையாக மூன்று பிரதிகளுக்கு மேல் இவற்றில் எந்த ஒரு நூலை வாங்குபவர்களுக்கு, மற்றும் மூன்று நூல்களிலும் தலா ஒரு பிரதி வாங்குபவர்களுக்கு 10% தள்ளுபடி உண்டு. இச்சலுகை 1-11-2007 முதல் 15-12-2007 வரை மட்டுமே.

**நூல்கள் கிடைக்குமிடம்**

**ஸ்ரீ விஷ்ணு சித்த ஸ்ரீ**, புது எண். 18, வெங்கடேச அக்ரகாரம், (வேதாந்த தேசிகா ஹால் எதிரில்) மயிலாப்பூர், சென்னை–600 004. போன் : 044–32519772, 044–42658989 செல் : 9381030130

**கிரி டிரேடிங் ஏஜென்சி பி. லிமிடெட்**, எண். 10, கபாலீஸ்வரர் சன்னதி வீதி, மயிலாப்பூர், சென்னை – 600 004. போன் : 044–24640376, 24642530 044–24953820

# சன்னியாசம்

"ரிஷிகேசம் போய் சன்னியாசம் வாங்கிக்கொள்ளலாம் என்று பார்க்கிறேன்..."

- இப்படி என் மனைவி காதுபடச் சொன்னேனோ இல்லையோ, "இப்ப மட்டும் என்னவாம்? 'காஸ் வரவேண்டிய தேதி கடந்து போச்சு; போய்ப் பாருங்களேன்'னு பத்து நாளா சொல்லிண்டிருக்கேன்; பரப்பிரம்மமாத் தானே உட்கார்ந்திண்டிருக்கேள்" என்று பொரிந்து தள்ளிவிட்டாள்!



அப்புறம் என்ன? ரிஷிகேசம் புறப்படுவதற்குப் பதில் காஸ் கம்பெனிக்குக் கிளம்பினேன். 'சன்னியாசியாவதற்குத்தான் ரொம்ப யோசிக்க வேண்டியிருக்கிறது; சன்னியாசிகள் பேசுவதையாவது கேட்டுவிட்டு வருவோம்' என்று அன்று மாலை தத்துவலோகா அரங்குக்குச் சென்றேன். மேடையில் அமர்ந்திருந்த தேவி வசந்தானந்தாவுக்கு சன்னியாச தீட்சை அளித்தவர் ரிஷிகேஷ் சிவானந்த சரஸ்வதி சுவாமிகள். "அவர் தீர்க்கதரிசி, ஞானி மட்டுமல்ல; பெண்களுக்கு சன்னியாசம் வழங்கக்கூடாது என்ற மரபை மாற்றிச் செயல்பட்ட புரட்சியாளர்!" என்று சுவாமி சிவானந்தாவை வர்ணித்தார் வசந்தானந்தா.

ஒரு சமயம் சுவாமி சின்மயானந்தா, 'சேவா தளத் தொண்டர்கள் தேவை' என்று அறிவித்தபோது, வசந்தானந்தா அவரிடம் போய், "நான் தொண்டாற்றத் தயாராக இருக்கிறேன். ஆனால், அதற்கு முன் தொண்டர்களின் பணி என்னவென்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றாராம்.

உடனே சின்மயானந்தா கூறினார்: "ஹிந்துக்களை ஹிந்துக்களாக மத மாற்றம் செய்வதுதான் உன் பணி!"

**யோ**சித்துப் பார்த்தால் இதில் எவ்வளவோ உண்மை இருக்கத்தானே செய்கிறது! ஹிந்துக்களாகிய நாம் ஹிந்து மதத்தைச் சரியாகப் புரிந்துகொண்டு செயல்பட்டால் இன்னமும் இரட்டை டம்ளர் முறை நீடிக்குமா? பெண் சிசுக் கொலை நடக்குமா? இன்னும் எத்தனையோ மூட நம்பிக்கைகள் ஒழியாமல் தொடருமா?

தேவி வசந்தானந்தா சன்னியாசம் பெற்று ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன. இதைக் கொண்டாடும் விதமாக... இல்லை இல்லை... இதை ஒரு சந்தர்ப்பமாக வைத்து, சுவாமி தயானந்த சரஸ்வதிக்கு

# அழைக்கிறது!



* 'சன்னியாசி ரத்னா' சுவாமி தயானந்த சரஸ்வதி; அவரை கௌரவிக்கும் தேவி வசந்தானந்தா; லோகக்ஷேம அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் ஆடிட்டர் வேபா கிருஷ்ணா

'சன்னியாச ரத்னா' விருது... தப்பு தப்பு... 'சன்னியாச ரத்னா' என்ற காணிக்கை வழங்கப்பட்டது. அவரும் அன்பு நிமித்த மாக மட்டுமே பற்றற்ற நிலையில் அதைப் பெற்றுக்கொண்டு சன்னியாசம் பற்றி ஒரு பேருரை நிகழ்த்தினார். பேருரையினி டையில் ஒரு குட்டிக் கதையும் சொன்னார்:

ஒருவன் குருவினிடம் சென்று, 'சுவாமி, நான் சன்னியாசம் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். எனக்கு சன்னி யாச தீட்சை கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டான். குரு சொன்னார்:

நீ இன்னும் பக்குவமடையவில்லை. சில காலம் சென்று வா.

இப்படியே நூறு தடவை நடந்தது. ஒரு நாள் அவன் குருவினிடம் வந்து, 'கடந்த பல மாதங்களில் நான் சன்னியாசம் பற்றி நிறைய படித்தும் கேட்டும் தெரிந்து கொண்டுவிட்டேன்; இப்போது எனக்கு சன்னியாச தீட்சையே தேவையில்லை' என்றான்.

உடனே குரு சொன்னார்: அப்பனே, சன்னியாச தீட்சை பெறுவதற்கு உன் மனம் இப்போது பக்குவப்பட்டு விட்டது! வா, வா! சன்னியாச தீட்சை வாங்கிக்கொள்!

குட்டிக் கதை தவிர, சன்னியாசம் பற்றி நிறையவே சொன்னார் சுவாமி தயானந்தா. சன்னியாசம் என்பது ஞானத்தேடல்; கிடைத்த ஞானத்தைப் பகிர்ந்துகொள்வது; சன்னியாசம் என்பது அஹிம்சை (பூ, இலைகூட பறிக்கக்கூடாது!); சன்னியாசம் என்பது அன்பு, சேவை, லோகக்ஷேமம்; சன்னியாசம் என்பது பற்றற்ற நிலை; சன்னி யாசம் என்பது புலனடக்கம்; எல்லா வற்றுக்கும் மேலாக சன்னியாசம் என்பது பக்தி. அபக்தி என்பது சன்னியாச மார்க் கத்தில் மட்டுமல்ல, வேறு எந்த யோக மார்க்கத்திலும் கிடையாது. பக்தி அனைத் துக்கும் அடிப்படை.

சுவாமி தயானந்தா சன்னியாசம் பற்றி விரிவாகப் பேசப் பேச, ஒரு விஷயம் மிகத் தெளிவாகப் புரிந்தது. அது, சன்னியாசியாக (நிஜமான) விளங்குவதென்பது ரொம்ப, ரொம்ப, ரொம்பக் கஷ்டமான காரியம் என்பதுதான்.

வீடு திரும்பியதும் மனைவியிடம், ''இதோ பாரு, இல்லறத்தில் இருந்தபடியே கூட ஒருவன் சன்னியாசத்தை அனுஷ்டிக்க முடியும் என்று சுவாமி தயானந்தா சொல்லிவிட்டார். அதனால் ரிஷிகேசம் புறப்படும் திட்டத்தைக் கைவிட்டு விட்டேன்'' என்றேன்.

பெருமூச்சுடன் 'ஹும்... எதுக்கும் கொடுத்து வெச்சிருக்கணும்' என்றாள் மனைவி!

**சம்சாரி**

# தராசு

## நீங்கள் கேட்டவை

* டைமிங் டயலாக்!



* விந்தை விளக்கம்!



* அதீத தடுமாற்றம்



* பழைய கணக்கு!

● லெ.நா.சிவகுமார், சென்னை

? "அரசியல் என்பது தியாகச் செயல்கள் நிறைந்த பணி. ஆகவே, சினிமாவில் அரசியல்வாதிகளை ஊழல் பேர்வழிகளாகச் சித்திரிப்பதற்காக, திரையுலகம் சார்பில் நான் மன்னிப்பு கோருகிறேன்" என்று ஷாருக்கான் சொல்கிறாரே?

! திரை உலகிலும் ஊழல் பேர்வழிகள் நிறையவே இருப்பதால் அவருக்கு இந்த பயம் ஏற்படுகிறது. ஆனால், அவர் வரையில் நேர்மையாளராக இருந்தால் அஞ்ச வேண்டியதில்லை.

● எஸ்.சுந்தரவடிவு, உறையூர்

? கலைஞரும் ஸ்டாலினும் சேர்ந்து தம்மைக் கொல்ல முற்படுவதாக ஜெயலலிதா கூறுவது உண்மைதானா?

! ஆதாரமில்லாத குற்றச்சாட்டு என்று ஸ்டாலின் மறுத்திருக்கிறார். பரபரப்பு அரசியலின் அதீத எல்லையில் நடம் பதித்துத் தடுமாறுகிறார் ஜெயலலிதா.

● ராஜி ராதா, பெங்களூரு - 34

? சினிமா விழாவில் ரஜினி, சேது சமுத்திரத் திட்டம் பற்றிப் பேசியிருப்பது தேவையா?

! திட்டமிட்டுச் செய்திருந்தாலும் சரி, யதேச்சையாக அமைந்ததென்றாலும் சரி, ரஜினியின் இந்தப் பேச்சு சரியான நேரத்தில், சரியான விதத்தில் வெளிப்பட்டது. ஆனால், முதல்வரின் பதில் திருப்தி தரவில்லை.

● ஆர்.ராமசுப்ரமணியம், வடவள்ளி

? பல வருடங்களுக்கு முன்பு நெய்வேலி நிலக்கரி நிறுவனங்களுக்கு நிலம்

*கொடுத்தவர்களை, தங்கள் நிலங்களுக்கு இப்போது அதிக விலை கொடுக்க வேண்டும் என்று போராடும்படி ராமதாஸ் தூண்டுவது நியாயமா?*

! நியாயமே இல்லை. முடிந்துபோன நில ஆர்ஜிதக் கணக்குகளைக் கிளற ஆரம்பித்தால் அதற்கு முடிவே இராது. ஏன், பிரிட்டிஷார்கூட மறுபடி இந்தியாவுக்குச் சொந்தம் கொண்டாடக்கூடும்! இனி நடப்பன நல்லதாக இருக்கட்டும் என்ற மனப்பான்மையுடன் டாக்டர் ராமதாஸ் சட்டத்தை மதித்து நடந்துகொள்வது நல்லது.

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

*? முன்னாள் முதல்வர் ஜெயலலிதா வீட்டில் ஒருவன் சாதாரணமாக நுழைந்தது எப்படி?*

! 'பாதுகாப்பின் அளவில் குறைபாடு இல்லை; பாதுகாப்பவர்களின் குறைபாடுதான்' என்பது முதல்வரின் விந்தை விளக்கம். அவ்வாறெனில், தரமான பாதுகாப்புக்கு மத்திய அரசு பொறுப்பேற்பது நலம்.

● ரேவதிப்ரியன், ஈரோடு

*? நடிக்க வைப்பதற்கு அடித்தேன் என்கிறார் டைரக்டர் சாமி. ஆசைக்கு இணங்க மறுத்ததால் அடித்தார் என்கிறார் பத்மப்ரியா - உங்கள் கருத்து?*

! இரண்டுமே அத்துமீறல் கொடுமைகள். நடிக்க வைப்பதற்காக அடிப்பதையும் மன்னிக்க முடியாது. பத்மப்ரியாவின் தரப்பு உண்மையல்ல எனில், அவ்வாறு புகார் சொல்ல இடமளிக்கும் அளவுக்கு நடந்துகொண்டதே தவறுதான்.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

*? "மாறன் மகன்களுக்கும் எங்களுக்கும் ஏற்பட்டது குடும்பத் தகராறு அல்ல; அரசியல் பிரச்னைதான். கட்சி விரோத நடவடிக்கையில் ஈடுபட்டதால்தான் சிக்கல் எழுந்தது" என்று கனிமொழி கூறியுள்ளது பற்றி...*

! அந்தக் கட்சி விரோத நடவடிக்கை என்ன என்பதைத் தெளிவுபடுத்தினால் நல்லது. அல்லாதபட்சத்தில் 'குடும்பத் தகராறு' என்று வெளிப்படையாகவும் வேறு பல காரணங்கள் ரகசியமாகவும் தொடர்ந்து பேசப்படுவதைத் தவிர்க்க முடியாது.

● க.வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

*? பாகிஸ்தானில் பேனசிர் வரவேற்புப் பேரணியில் மனித வெடிகுண்டு வெடித்து 150 பேர் கொலை செய்யப்பட்டுள்ளது எதைக் காட்டுகிறது?*

! ஒரு மாபெரும் சதித் திட்டத்தைத்தான் உணர்த்துகிறது. அதில் முஷாரஃப்புக்குச் சம்பந்தமில்லை என பேனசிர் கூறுவதை வியப்புடன்தான் ஏற்க வேண்டியுள்ளது. முஷாரஃப் வளர்த்துவிட்ட வன்முறையை, அவராலேயே கட்டுப்படுத்த முடியவில்லை என்பது புரிகிறது. ஒரு சர்வாதிகாரியுடன் சமரசம் செய்துகொண்டு கண் துடைப்பு ஜனநாயகப் போர்வையில் நாடாள நினைப்பதன் அபத்தம் தெளிவாகிறது.

● கு.அருணாசலம், தென்காசி

*? தமிழகம் எங்கும் பரவும் எஃப்.எம். ஒலிபரப்புகளால் டி.வி. மெகா சீரியல்*

# சினிமா விழாவில் ரஜினி பேசியது சரியா..?


★ பயத்துடன் மன்னிப்பு...

களுக்கு ஆபத்தா?

! எங்கே! சீரியல்களின் எண்ணிக்கையும் நீளமும் அபத்தமும் அதிகரித்துக்கொண்டல்லவா வருகின்றன. கண்ணுக்கு உணவில்லாத போது சிறிது செவிக்கும் ஈயப்படும்!

● என்.காளிதாஸ், சிதம்பரம்

*? இந்தியாவுக்கு யுரேனியம் விற்கும் திட்டத்தை, ஆஸ்திரேலியா நிறுத்தியது பற்றி...?*

! அணுசக்தி ஒப்பந்தம் ஏற்பட்டு, சர்வதேச கண்காணிப்பை ஏற்றாலன்றி யுரேனியம் சப்ளைக்குத் தடை உள்ளது. இதன் பொருட்டுதான் அணுசக்தி ஒப்பந்தமே. அது தொங்கலில் நின்றால் ஆஸ்திரேலிய சப்ளையும் தொங்கல்தான்.

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:
ராஜிராதா,
பெங்களூரு - 34

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
எஸ்.ராமசாமி,
வடக்கு தயிர்பாளையம்

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

*? பள்ளிகளுக்கு செல்போன் எடுத்து வருவது தடை செய்யப்பட்டுள்ளதாமே?*

! பெற்றோருடன் ஓர் அவசரத்துக்குத் தொலைபேசி தொடர்புகொள்ள ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் வாய்ப்பு மறுக்கப்படாமலிருந்தால் இந்தத் தடை உத்தரவு நியாயமே - படிப்பிலிருந்து கவனம் திசை திரும்பும் என்பதால். கலாசார சீரழிவைக் காரணம் காட்டித் தடைசெய்ய முடியாது. ஏனெனில், பள்ளிக்கூட நேரத்துக்குப் பிறகு, செல்போன் பயன்படுத்துவதைப் பள்ளிகள் தடை செய்ய முடியாது. இதற்கு பெற்றோர்தான் பொறுப்பேற்க வேண்டும்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

*? தொடர்ந்த சட்டசபை அமளிகளுக்காக அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்களைக் கூட்டத் தொடர் முழுவதும் சஸ்பெண்ட் செய்திருப்பது சரியா?*

! சபைக்கு வெளியே பேசப்பட்ட ஒரு விஷயத்துக்காக, சட்டசபைக்குள்ளே உரிமைப் பிரச்னை எழுப்புவது சரியா? அதன் தொடர் விளைவுகள்தானே தொப்பியைப் பிடுங்கி வீசுதல், வெளியேற்றம், ஆர்ப்பாட்டம், சஸ்பெண்ட் உத்தரவு முதலியன! எல்லாம் சேர்ந்து, சட்ட சபையை அமைதி கெட்ட சபை ஆக்கி விட்டன.

● கே.அகிலாண்டம், காஞ்சிபுரம்

*? அணுசக்தி ஒப்பந்தப் பிரச்னையில் வெற்றிபெற்றது காங்கிரஸா? இடது சாரிகளா?*

! அமெரிக்கா! America will have the last laugh!

● எஸ்.ராமசாமி,
வடக்கு தயிர்பாளையம் ★

*? ஒன்பது முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை மாணவர்களுக்கு எய்ட்ஸ் பற்றிய பாடம் நடத்த தமிழக அரசு உத்தரவிட்டுள்ளதே - இது சரியா?*

! 'எய்ட்ஸ் பற்றிய பாடம்' என்று தனித்துக் கூறும்போது சற்றுக் கலவரப்படுத்துவது போல்தான் இருக்கிறது. நான் பள்ளியில் படித்த காலத்தில் 'ஹைஜீன்' என்ற வகுப்பு இருந்தது. அதில் அக, புறத் தூய்மை என்பதை, தனிமனித அளவிலும் சமுதாய நோக்கிலும் மிகவும் கருத்தாக, இயல்பாகக் கற்றுத் தந்தார்கள். பாடத் திட்டத்தை இவ்வாறு பொது நோக்கில் வகுத்து, அதில் எய்ட்ஸ், கான்ஸர், ஹெபடைடீஸ், டயாபடீஸ் என நவீன உலகின் நோய்கள் பலவற்றையும் உள்ளடக்குவது நல்லது.

★ அபத்த சமரசம்


# தமிழக அரசுக்கு ஒரு புத்தகம்!



**உயிர்களைத் தேடித் தேடி - செய்யாறு தி.தா.நாராயணன், நர்மதா பதிப்பகம், 10, நானா தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.65**

கல்கி நாவல் போட்டியில் இருபத்தைந்தாயிரம் பரிசு பெற்ற புத்தகம். விறுவிறுப்பான நடையில், நம்மை விண்வெளிக்கே அழைத்துச் செல்கிறார் நாவலாசிரியர். அரிய விஞ்ஞானத் தகவல்களை மனித உறவுகளோடு பின்னிப் பிணைந்து படைத்திருப்பது சுவாரஸ்யம் தருகிறது.




**இஸ்லாம், பெண்களின் உரிமையைப் பறிக்கிறதா? - பி.ஜைனுல் ஆபிதீன், நபீலா பதிப்பகம், மூன் பப்ளிகேஷன்ஸ், 3, போஸ்ட் ஆபீஸ் தெரு, மண்ணடி, சென்னை - 1, விலை ரூ.26**

ஹிஜாப், இத்தா, தலாக், பெண் கல்வி, பலதார மணம், பெண்கள் பள்ளிவாசலுக்கு வரலாமா என்பனவெல்லாம் குறித்து முஸ்லிமல்லாதோருக்கு எழும் ஐயங்கள், நூலில் சிறப்புற தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.




**சிதம்பர் கோயில் சில உண்மைகள் - ச.செந்தில்நாதன், சிகரம், ஏ-1, அருணாச்சலம் அடுக்ககம், 1077, முனுசாமி சாலை, கே.கே.நகர், சென்னை - 78, விலை ரூ.25.**

சிதம்பரம் கோயிலில் எழுந்த பிரச்னைகள், வழக்குகள் பற்றிய உண்மைகளை வெளிச்சத்துக்குக் கொண்டுவர முயற்சித்துள்ளார் ஆசிரியர். தீட்சிதர்களின் பூர்வீக வரலாற்றை ஆராயுமவர், தில்லைக் கோயிலில் அவர்களின் போக்கைக் கண்டிக்கிறார். தீட்சிதர்களின் வாழ்வு முறை குறித்துப் பல வினாக்களை எழுப்பி, பிரச்னைகளை தமிழக அரசின் முன் வைத்துள்ளார், நியாயமான தீர்ப்புக்காக!




**கட்டுங்கள் கனவு இல்லத்தை - பெ.கோகுலபாலன், வேண்ட்மார்க் பப்ளிகேஷன்ஸ், 12, ஃபர்ஸ்ட் மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 61, விலை ரூ.250**

வீடு கட்டுவதற்குத் தேவையான அனைத்து விவரங்களையும் கொண்டுள்ள கட்டடத் தகவல் களஞ்சியம். கட்டிய பின் ஏற்படும் குறைகள், அவற்றை நிவர்த்தி செய்யும் முறை எனப் பல நுணுக்கமான விவரங்கள் அழகுற தொகுக்கப்பட்டுள்ளன.

– மித்ரா









ஸ்ரீகூர்மம் சிற்பத் தோரணம்: சித்திரம் :

என்
செலவும் சேமிப்பும்
நீதான்

உன்னோடு
பேசிச் சிரிக்கும்போது
செலவாகும் உயிர்

உன் ஞாபகங்களை
சேமிக்கும்போது
ஊறிவிடுகிறது



'மஞ்சள் வெயில்' படத்தில்...
பிரசன்னா-சந்தியா

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.